சிவ சிவ

நம்மவர்களே !

அவைஅஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும், கல்லார்
அவை அஞ்சா ஆகுலச் சொல்லும் - நவைஅஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இன்நலமும்
பூத்தலில் பூவாமை நன்று.

— ஸ்ரீ குமரகுருபரர்

சபைக்கோழையிடத்திருக்கும் கல்வி பயனற்றது; கல்லாதவனிடம் இருக்கும் சபைக்கஞ்சாத வெற்று ஆரவாரச் சொற்கள் பயனற்றன. ஈயாத புன்மைக்கு அஞ்சாமல், கொடுத்துய்க்காத கஞ்சர்களின் செல்வம் பயனற்றது: ஏழைகளின் அழகு பயனற்றது: இந்தக் கல்வி, பேச்சு, செல்வம் அழகுகள் மலராமல் இருப்பதே நல்லது.

# ஸ்ரீ குமரகுருபரர்

ஸ்ரீ காசிமடம் அதிபர் கயிலை மாமுனிவர்
**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**
அருளாணையின் வண்ணம் வெளிவரும் சமய இலக்கியத் திங்களிதழ்

சிறப்பாசிரியர்
திரு. அ. ச. ஞானசம்பந்தன்
ஆசிரியர் குழு :
1. திரு. மு. அருணாசலம்
2. திரு. கா ம. வேங்கடராமையா
3. முதுமுனைவர் ச. தண்டபாணி தேசிகர்
4. மகாவித்துவான் சி. அருணைவடிவேல் முதலியார்
5. திரு க. வச்சிரவேல்முதலியார்
6. புலவர் திரு. கீரன்
7. டாக்டர் டி.பி. சித்தலிங்கையா
8. டாக்டர் கு. சுந்தரமூர்த்தி
9. பனசை திரு. சுவாமிநாதன்

உள்ளே :

679

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# பெருமான் புகழ்

*திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்*
*'கயிலைமாமுனிவர்' ஸ்ரீலஸ்ரீ*

**காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

கொண்டானின் உயர்வு மனைவிக்கும் ஏற்றம் தருவது கண்கூடாகும். இதை இப்படிமாற்றிப் பார்ப்பதில் நம் தமிழ் இலக்கியங்கள் சுவைகாணும்: மனைவியின் மாண்பு கணவனுக்கு ஏற்றம் தரும் என்று.

இல்லதுஎன் இல்லவள் மாண்பானல் உள்ளதுஎன்
இல்லவள் மாணுக் கடை

என்ற வள்ளுவமும் மனைமாட்சியைச் சுவைத்துப்பேசுகிறது. கணவனுலும் மனைவிக்குப் பெருமைகள் சேரும். மனைவியாலும் கணவனுக்கு ஏற்றம் உண்டு.

இந்தச் செய்தியைச் சிவபெருமானுக்கும் உமையம்மைக்கும் ஒட்டிப்பார்க்க முடியுமா? ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கவிச்சுவைக்காக அப்படியும் சிந்தித்தருள்கிறர்கள். இந்தத் தம்பதிகளுள் கணவனல் மனைவிக்கு அவமானம் மனைவியால் கணவனுக்குப் பெருமைஎன்கிறர்.

உமையம்மையின் செயல் சிவபெருமானுக்குப் பெருமை தருகிறதாம். சிவனின் செயல் உமையம்மைக்கு அவமானம் தருகிறதாம்.

மனைவி மிகு புகழ்கொண்ட செயலைச் செய்பவளாகவும் கணவன் தாழ்வுச்செயல்கள் செய்பவனாகவும் இருந்தால் அந்தத் தாம்பத்யம் சிறப்பானதாகாது. அதோ போகிறாளே அவள் இன்னாருடைய மனைவி என்று உலகம் சுட்டிப் பேசுவது நல்லது. அதோ போகிறானே அவன் இன்னாளுடைய கணவன் என்று சுட்டிப்பேசுவது நல்லதாகாது. இரண்டு சுட்டுக்களுமே பாராட்டு அம்சங்களை ஒட்டியதானாலும் கணவனால் மனைவி அறிமுகப்படுத்தப் பெறுவதே நல்லதாகும்.

ஓதாதுணர்ந்த பெருஞான வள்ளலாகிய ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் கவிச்சுவைக்காகவும், தத்துவ வெளிப் பாட்டுக்காகவும்,

'இல்லாளே முப்பத்து இரண்டுஅறமும் செய்து இருப்பச்
செல்ஆர் பொழில்காசிச் செல்வனார் - மெல்லப்
பரக்கின்ற புண்ணீர்ப் படுதலைகொண்டு ஐயம்
இரக்கின்ற வாறு என்சொல் கேன்?'

என்று காசிக் கலம்பகத்துள் ஒரு வெண்பாப் பாடியருளி யுள்ளார்கள்.

மனைவி முப்பத்திரண்டறங்களைச் செய்பவள். கணவன் எதற்காகப் பிரமகபாலத்தை ஏந்தி யாசிக்கிறான்? என்று நயமாகக் கேட்கும் அப்பாடலில் அழகிய தொனி அலங்காரமும் இருக்கிறது. அறம் செய்யும் அவள் இல்ஆள். பிச்சை எடுக்கும் இவர் செல்வனார்! இல்லாள் என்பதற்கு மனைவி என்பதே பொருளாயினும் தனக்கென ஏதுமற்றவள் என்றும், செல்வனார் என்பது இவ்விடத்தில் கணவன் என்ற பொருளுடையதேயாயினும் செல்வம் மிக்கவன் என்றும்

பொருளமைய இருக்கும் நிலைமையையே தொனி என்பார்கள், அணியியலார்.

காஞ்சியில் ஏகம்பன் ஒரு நாழி நெல்தர அதனைக் கொண்டே இறைவி எண்ணான்கறங்களையும் செய்யும் அருமைப்பாட்டையே கவிச்சுவையூட்டி ஸ்ரீ சுவாமிகள் இவ்வண்ணம் அருளியுள்ளார்கள் என்பதை நாமுணர்தல் வேண்டும்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அவர்கள் காசிக்கலம்பகம் அருளியதற்கு முன்பே சிதம்பரச் செய்யுட்கோவையை அருளினார்கள். சிதம்பரச் செய்யுட்கோவையின் ஆறும் திருப்பாட்டில் இதே கருத்தினை அருளியுள்ளார்கள். அத் திருப்பாடல் வருமாறு :-

வணங்கு சிறுமருங்குல் பேர் அமர்க் கண் மாதர்
அணங்கு புரிவ(து) அறமால் - பிணங்கி
நிணங்காலும் முத்தலைவேல் நீள்சடைஎம் கோமாற்(கு)
இணங்காது போலும் இரவு.

மனைவியாகிய உமையம்மை புரிவது அறம். கணவனாகிய சிவபெருமான் தொழில் இரவு-அதாவது யாசித்தல். இது பொருந்துமா ?

பொருந்தாது போலும் !

பொருந்தாது என்றே இப்பாடலில் தீர்ப்புச் சொல்லவில்லை ! 'போலும்' என்கிறார். போலும் என்பதை அசைநிலையாகப்பொருள் கொண்டால் இந்தருசி கொஞ்சம் குறைந்துபோகும். பின்னேபாடிய காசிக்கலம்பகப் பாடலிலேயும்

ஐயம்
இருக்கின்றவாறு என்சொல் கேன்?

என்று ஐயத்தை ஐய வினுவாகவே அமைத்தார்கள். முன்னே பாடிய பாடலில் தீர்ப்புச் சொல்லிவிட்டால் அந்த ஐயவினு அழுத்தமற்றதாகத் தெரியும். எனவே இங்கே

நீள்சடைஎம் கோமாற்(கு)
இணங்காது போலும் இரவு

என்பதன்கண் உள்ள போலும் என்பதையும் விடைத் தெளிவுதராத ஐயக்குறிப்பாகக் கொள்ளுதலே சாலும்!

தில்லையில் ஈசன் நடனமாடுகின்ருன். அருகில் உமையம்மை நிற்கிருர்கள். ஐயன் நடனமாடும் எழிற்காட்சிக்கேற்ப அம்மை இடையை வளைத்து நிற்கிருர்கள். அதுவே நாட்டிய முத்திரை. சின்ன இடையை வளைத்து நிற்கும் அற்புத அழகு, ஆண் ஆடும் நடனத்தில் புலப்படுத்த ஒண்ணுதது. உமையம்மை இடையை வளைத்து நிற்கும் இந்தத் திருக்கோலத்தைக்கண்ட பிறகும் ஐயன் மட்டுமே அம்பலத்தில் ஆடுகிருன் என்று எவரும் சொல்லமாட்டார்கள்! அம்மையின் நடன முத்திரையைக் கண்டு ஆனந்தித்து அப்பன் நடனம் புரிகிருன் என்றே சொல்வார்கள்.

'நெளிந்த சிறு மருங்கில் மாதர்' (உமையம்மை) என்று பாடாமல் 'வணங்கு சிறுமருங்குல் மாதர்' என்று ஸ்ரீசுவாமிகள் பாடியதிலேயும் ஒருகுறிப்பு உள்ளது. அன்னையின் அந்த நெளிவும் நாணும் ஐயனுடன் ஆடுதல் விழைந்த விருப்பத்தால் விளைந்ததன்று. தாமே வணங்கியது.

அவள் இடை சிற்றிடை; அவள்கண் பெரியகண். முதலடியில் உள்ள இந்தமுரண் அணி, பாடல் முழுவதிலும் வருகிறது. மனைவி அறம் செய்கிருள்; கணவன் யாசிக்கிருன் என்பது பொருள்முரண் அல்லவா? முதலடியில் சொல் முரணும் பாடல் முழுவதிலுமாகப் பொருள்முரணும் அமையப்பாடிய அழகை நாம் துய்த்தின்புறுதல் வேண்டும்!

இத்திருப்பாடல் இரண்டு குறள்வெண்பாக்களை இணைந்துத் தந்ததாகும். முதல் குறள் வெண்பா அம்பிகை பற்றியது. இரண்டாம் குறள் வெண்பா ஈசனைப் பேசுவது. சிவகாமியின் வழியாக ஸ்ரீமந் நடராஜப் பெருமானைத் தெரிசித்தல்வேண்டும். இவ்வழிபாட்டு முறையை இத்திருப்பாடலின் அமைப்பு முறையால் ஸ்ரீசுவாமிகள் காட்டியருளியுள்ளார்கள் என்று கூறலாம்!

உமையம்மையின் மருங்குலும் கண்ணும் வருணிக்கப் பெற்றதற்கொப்பச் சிவனின் வேலும், சடையும் வருணிக்கப்பட்டன. எண்ணளவால் சமம். முத்தலைவேல் என்பது திரிசூலத்தைக் குறித்தது. அசுரப்பகைகளை அழித்து அமரர்க்கருள் புரிவதனால் நிணம் காலுவது அது.

''இது குறள் இரண்டாய், முதற்குறள் ஈற்றின்கண் ஓர் ஆசு இடையிட்டு, தனிச்சொல் பெற்று, ஒரு விகற்பமாய் நடத்தலான் ஒருவிகற்பத்து ஓர் ஆசிடை நேரிசை வெண்பா. இதனுள் முதலடி நடுவு இருசீரும் முரணத் தொடுத்தமையால் இடைப்புணர் முரண். இது பிறப்பென்னும் வாய்பாட்டு முற்றுகர இயற்சீரான் முடிந்தது''- என்று இப்பாடலின் கீழே செய்யுளிலக்கணக் குறிப்பு உள்ளது.

வணங்கு சிறுமருங்குல் பேரமர்க்கண் மாதர்
அணங்கு புரிவ தறம்.

என்பது முதற்குறள்.

திணங்காலு முத்தலைவே ணீள்சடையெங் கோமாற்
கிணங்காது போலு மிரவு.

என்பது இரண்டாம் குறள்.

— பிணங்கி

என்பது தனிச்சொல். நிரைதொடக்கமான தனிச்சொல்லுடன் முதற்குறளின் ஈறு தலைப்படாமையால், அறம் என்ப

துடன் 'ஆல்' என்ற ஓர் ஆசு சேர்க்கப்பட்டது. 'அறமால்' என்ருயிற்று. இவ்வகையில் அறமால் - பிணங்காது என்பத லிடையில் மாமுன் நிரை - இயற்சீர் வெண்டளே வந்தது. அது வெண்பாவுள் வரவுரிய தளேயாகும்.

நான்கடிகளின் இரண்டாமெழுத்துக்கள், தனிச் சொல்லின் இரண்டாம் எழுத்து ஒன்ருகவே (ணகரமாகவே) உள்ளமையால் ஒரு விகற்பமாகிறது.

முதலடியில் வரும் சிறு பெரு என்பன முரண் தொடை கள். நடு இரண்டகளில் மோனே முதலாயின வரத்தொடுப் பது இடைப்புணர்வென்னும் தொடைவிகற்பமாகும். நான்கு சீர்களேக் கொண்ட முதலடியில் இரண்டாம் சீரிலும் மூன்ருல் சீரிலும் முரண் தொடை வந்தமையால் இது இடைப்புணர் முரண் ஆகிறது.

முரண் என்பது இலக்கணச் சுவை கருதுவார்க்குத் தொடையாகவும், இலக்கியச் சுவை கருதுவோர்க்குஅணி யாகவும் அமையும். எனினும் பிற தொடைவகைகள் ஓரடி யுள் இல்லாதபோது அதனேத் தொடையாகக் கருத வேண்டும் என்ற அரிய அநுபவக் குறிப்பு இங்கே பெறப் படுகிறது. இவ்வரிய குறிப்புத் தமிழில் உள்ள அணி நூல் கள், யாப்பு நூல்கள் ஆகியவற்றில் யாண்டும் பெறப் படவில்லே என்பது கருதத்தக்கதாகும்

'அணங்கு புரிவது அறமால்-பிணங்கி' என்ற அடிமுதற் சீரிலும் மூன்ரும் சீரிலும் மோனே ஒன்றிப் பொழிப்பு மோனே அமைந்த அடியாகிறது

'நிணம்காலும் முத்தலேவேல் நீள்சடைஎம் கோமாற்கு என்ற அடியும் அதேபோல் பொழிப்பு மோனே உள்ள அடி ஙிறது.

'இணங்காது போலும் இரவு'

என்ற அடியிலும் முதற்சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை உள்ளது. நான்குசீர்கள் கொண்ட அடிக்கே இணை, பொழிப்பு முதலிய தொடைவிகற்பங்கள் கூறுவர் ஆகையினால் ஈற்றடியைப் பொழிப்புமோனை உள்ள அடி என்று கூறுதலாகாது. எனினும்முதற் சீரிலும் மூன்றாம் சீரிலும் மோனை அமைந்த அடி எனக் கூறலாம்.

பின் மூன்றடிகளிலும் மோனைத்தொடை அமைத்தவாறு முதல் அடியில் அது அமையவில்லை எனவே அங்குள்ள சிறு பெரு என்பனவற்றை இணைமுரண் என்று கூற வேண்டும். எத்தொடையும் அற்றதாகிய செந்தொடை என்பது பாடல் முழுவதிலுமாக அமைந்திருக்க வேண்டியது என்ற அநுபவ இலக்கணமும் இங்கு உளங்கொள்ளற்பாலதாகும்.

வெண்பாவின் ஈற்றடி நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளான் முடிதல் வேண்டும் என்ற இலக்கணம் முன்னரும் கூறப்பெற்றதே. அவற்றுள் காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளால் முடிவன குற்றியலுகரங்களாக அமைதல் வேண்டும். நேர்நேர்; நிரை, நேர் எனக் கூறாமல் காசு, பிறப்பு என வாய்பாடு கூறியதன் நயமே அது வாகும்.

குற்றியலுகரங்கட்குக் கூறப்பெறும் இலக்கணங்கள் முற்றுகரங்கட்கும் சில இடங்களில் பொருந்திவரும். 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்' என்னும் குற்றுகர வீற்றின்முன் உயர்வரின் புணர்ந்தற்கானவிதி திரு+ அழகிது = திருவழகிது என முற்றுகர வீற்றுக்கும் பொருந்துகிறது. 'ஒஉம் உவ்வும் ஏயொடு சிவணும், உகரம்தானே குற்றியலுகரம்' எனக் குற்றியலுகரம் விளியேற்குங்கால் ஏகாரம் பெறும் என்னும் விதி திருவே என முற்றியலுகரமும் பெற்று வரும்.

யாப்பிலக்கணத்துள்ளும் காசு பிறப்பு என்பன குற்றியலுகரவீறுகளேயாயினும் முற்றுகர ஈறுகட்கும் இவ்வாய்பாடு கூறும் இடங்கள் உள.

புனைமலர்த் தாரகலம் புல்லு
அஞ்சொன் மடவார்க் கருளு

என்பனவற்றை உதாரணமாகங் காட்டினார் குணசாகரர். புல்லு - காசு; அருளு - பிறப்பு. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

'இணங்காது போலும் இரவு'

என வெண்பாவை நிறைவு செய்தார்கள். இரவு என்பது பிறப்பு என்னும் வாய்பாடு கொண்டது. எனினும் முற்றுகர ஈற்றான் நிறைவு பெற்றது.

— சிவ சிவ



# அதிலும் ஓர் உற்சாகம்

'புதுமையை உத்வேகத்துடன் வரவேற்கிறோம் என்றால் அதில் பழமைகளை - மரபுகளை அழிக்கப் போகிறோம் என்ற அர்த்தமில்லை' என்று நம் பாரதப் பிரதமர் அண்மையில் தெரிவித்த கருத்து மிகமுக்கியமானதாகும். மரபுகளில் உள்ள நல்லதை எல்லாம் ஏற்றுப் போற்றுவதில் நம் நாடு என்றுமே பின்னிற்கப் போவதில்லை என்ற அவரின் வீரவுரை நமக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருவதாகும். அத்துடன் இணைத்துச் சிந்திக்க வேண்டிய ஒரு செய்தி 'மரபுகளில் தீமை இருக்க அதிகம் வாய்ப்பில்லை' என்பதாகும். மரபுகளில் இது தீயது என்று கணிக்கும் போது அவசர முடிவாக அது அமைந்துவிடக் கூடாது.

பிரதமரின் உரைகளை விமரிசிப்பதற்காகவோ, அல்லது பாராட்டுவதற்காகவோ இதனை இங்கே எழுதவில்லை. ஸ்ரீகாசிமடம் அதிபர் கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அண்மையில் மேற்கொண்டுள்ள புதிய முயற்சி ஒன்றின் பயன்கள் பற்றி அளவீடு செய்ய அந்த உரை உதவுகிறது என்ற நோக்கத்திலேயே கூறப்பட்டது.

கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள், அடுத்த நூற்றாண்டின் சமய எதிர் பார்ப்புகளுக்கு ஏற்ற வகையில் புதியதொருதிட்டம்வகுத்து அதனை விமரிசித்து நாளேட்டுகள் செய்தியாளர்களுக்குப் பேட்டியளித்தருளினார்கள். அந்தப் பேட்டியைத் தத்தம்

இதழ்களுக்கு ஏற்றவாறு தினமலர், தினத்தந்தி, தினமணி உள்ளிட்ட நாளேடுகள் செய்தியாக வெளியிட்டிருந்தன. அதுபோது வெளியிட்டிருந்த அறிக்கை 'அதிபர் அவர்களின் அறிக்கை' என்ற பெயரில் சென்ற இதழில் பிரசுரிக்கப்பட்டது.

இவற்றின் அடிப்படையில் பலர் துறவுக்கும் தொண்டுக்கும் தயார் என்று விண்ணப்பித்திருப்பது உற்சாகமளிப்பதாகும். நம் சமயத்தில், படித்தவர்கள் அறிவாளிகள் துறவுநிலைக்கே இனி வரமாட்டார்களோ என்ற அச்ச இருள் நீங்கி விட்டது. என்ருலும் எதிர்பார்த்த அளவுக்கு இல்லை. இன்னும் பலர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் திருமுன்னிலைக்கு விண்ணப்பித்துத் தூய துறவுப் பேரொளிகளாதற்கு முன் வர வேண்டும்.

இப்புனிதப் பெரும் பணியில் சைவர் சங்கங்களின் ஈடுபாடு குறிப்பிடத்தக்கதாகும். பல ஊர்களில் சைவர் சங்கங்களின் கிளைக்கூட்டங்கள் கூட்டப் பெற்று, ஸ்ரீகாசிமடம் அதிபர் அவர்களின் அறிக்கை படிக்கப் பெற்றதாகச்செய்திகள் வந்துள்ளன. அதன் பயன்களும் மகிழ்ச்சி தருவனவாக அமையும் என்று எதிர்பார்ப்போமாக.

இளைய முதுதவம் ஆற்றுதும் நோற்று என்று
உளைவின்று கண்பாடும் ஊழே - விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேல் காண்பாரும்
தாழாமே நோற்பர் தவம்

— நீதிநெறி விளக்கம்

# மநுநீதியின் மந்திரிகள்

ம வே. பசுபதி

## மரபு :

சேக்கிழார் பெருமானல் உலகறிந்த மன்னவனுள பேறு பெற்றவன் அநபாய சோழன். அவன் மநுவேந்தனின் மரபில் வந்தவன்.

'மன்னுசீர் அநபாயன் வழிமுதல்
மின்னும் மாமணிப் பூண்மநு வேந்தனே -'

என்பர் சேக்கிழார், மநுவேந்தனின் மரபினன் அநபாயன் என்பதும் அநபாயனின் மரபினன் மநுவேந்தன் என்பதும் பொருத்தமான தொடர்களே, கவிச்சக்கரவர்த்தி கம்பரும் வெண்ணெய்மன் சடையோன் தங்கள் மரபுளோர் என்று தழைய முடி தொட்டுக்கொடுத்து அருள்செய்த வேளாளர்களைக் கூறுவார். வழிமுதல் என்ற சொல் மூலமுனிவனையே பெரும்பாலும் குறிக்கும். மூலமுனிவனின் பெயர் கூறும் முறைமையே 'கோத்திரம்' எனப்படும். அநபாயனின் கோத்திர முதல்வன்' மநு அல்லன். மநுவை. அறிமுகப்படுத்துமளவுக்கு அநபாயனை உயர்ந்தவனுக்கும் நயக்குறிப்பு. இத்தொடரில் உள்ளது. 'மறுவில் கற்பின் வாணுதல் கணவன்' என்று முருகப் பெருமானை வள்ளி நாச்சியாரின் கணவன் என்று கூறி அறிமுகப்படுத்துவது போலச் சுவைக்கத்தகும் ஓர் இடமாக இதனைக் கருத வேண்டும்.

## மநுவின் வரலாறு :

மநுநீதிச் சோழன் வரலாறு உலகறிந்த தொன்றாகும். அதனைச் சேக்கிழார் திருநகரச் சிறப்பில் தெரிவிக்கிறார். திருத்தொண்டத் தொகையில் கூறப்பெருத ஒரு வரலாறு அதன் சார்பு நூலில் கூறப் பெற்றிருப்பதற்குப் பெரியபுராண ஆராய்ச்சியாளர்கள் போதுமான காரணங்கள் சொல்லிவிட்டார்கள்.

தாய்ப்பசுவின் முறையீட்டுக்காகத் தன் மகனைத் தேர்க்காலில் இட்டு முறைசெய்த மன்னவன் வரலாற்றில் குறிப்பிடத்தகுந்தவர்கள் மநுவின் மகனும் மந்திரியுமாவர். மநுமன்னன் ஆராய்ச்சிமணி கட்டி ஆண்டான் என்னும்போதே, அவன் நீதி தவறப் போவதில்லை என்ற உறுதி புலனாகிறது. வாதங்கள் எப்படி வந்தாலும் மனம் மாறாதவன்

புறுதி அவன் பிறவிக்குணம். எனவே காரணங்கள் அவன் நேர்மைக்குத் தடைக்கற்களாகவோ திசைமாற்றும் மடைகளாகவோ அமைய இயலாது.

**மகனின் குணம்:**

தவறிச் செய்த தவறு மன்னிப்பிற்குரியது. சமய வாதங்களில் ஆழமான உணர்வு பெறும்போது விதிக்கொள்கையின் ஆக்ரமிப்பு முழுமையாகி விடுவதைத் தவிர்க்க இயலாது. கன்று இறந்ததற்காக ஒரு மன்னனின் மகன் 'என் செய்கேன்' என்று தேரிலேயிருந்து இறங்கித் தடுமாறிவிழுந்து புலம்புகிறுன் என்ருல் அவனுக்கு அதற்கும் மேல் ஒரு தண்டனை தேவையில்லைதான். மனித சரீரத்துக்கு இயக்க சக்தியாகிய உயிர் இன்றியமையாதது. அதற்கும் மேலாக ஒன்று உண்டு. அதுசில பேருக்கு மட்டும்தான் கிடைக்கும். அதைத்தான் உணர்வு என்று சொல்லுவார்கள். மநுவின் மகன் தந்தையாலேயே தேர்க்காலில் நசுக்கப்பட்டான். அப்போது அவனுடைய உயிர் பிரிந்தது உண்மை. உயிருக்கும் மேலாக விளங்கிய உணர்வு என்பது கன்றின் உயிர் பிரியும்போதே மநு மன்னனின் மகனுக்கும் பிரிந்து போய்விட்டது. உயிரின்றி வாழமுடியாது என்பது நாமறிந்த உண்மை. உணர்வின்றி வாழும் வாழ்வு வாழ்வாகாது என்பது மநு மன்னனின் மகன் அறிந்து அறிவிக்கும் தத்துவம். உயிரைப் பெற்றிருப்பது வினையால் வந்த உரிமை. உணர்வைப் பெற்றிருப்பது அருளால் வரும் பெருமை.

உயிர் பிரிவதற்குமுன் உணர்வு பிரிந்ததற்காகவே அவன் பெரிதும் வருந்துகிறுன். மநு மன்னனின் மகனைப் பிறந்த பெருமையைக்காட்டிலும் உணர்வையே அவன் பெரிதும் மதித்துப் போற்றினுன். கன்றின் இறப்பும் பசுவின் துடிப்பும் மநுவின் மகனுக்கு உடனடியாகத் தண்டனை வழங்கிவிட்டது. அவன் உணர்வு அந்த விநாடியே மாண்டது. 'பெற்றமும் கன்றும் இன்றெனன் உணர்வெனும் பெருமை மாளச் செற்ற என்செய்கேன்' என்று அவன் புலம்புகிறுன்.

மலர்தலை யுலகம் காக்கும் மநு எனும் எங்கோமானுக்கு
உலகில் இப்பழி வந்து எய்தப் பிறந்தவா ஒருவன்

என்று அவன் புலம்பிய உரை உணர்வெனும் பெருமை மாண்ட பிறகும் வந்த உரையாகும். அரசனுக்குப் பழிவரும் படியாகக் குடிமக்கள் நடக்கக் கூடாது என்ருல், அந்தத்தத்துவ வசனத்துக்குள் ளேயே தந்தைக்குப் பழிவரும்படியாக மகன் நடக்கக் கூடாது என்ற தார்மீக வசனமும் அடக்கமாகிறது.

இராவணனின் அருமைத்தம்பி யுத்த களத்துக்குப் போகும் போது அண்ணனை 'அரசனே! என்று விளிக்கிறுன்'. 'குற்றமும் உள

எனில் பொறுத்தி கொற்றவ!' என்பது அவன் வீரவுரை. விரக்தி மனோநிலையில் கும்பன் அப்படிச் சொன்னனில்லை. அதிருட்சம உணர்வோடுதான் அண்ணனை 'அரசனே! என்று விளித்தான் மநுவின் மகனும் தந்தையை 'எங்கோமான்' என்று உரைக்கிருன். பிரஜை என்ற நிலையிலேயே பழி ஏற்படுத்தக்கூடாது என்று கருதிய ஆழமான தெளிவுணர்வு எங்கோமானுக்கு என்பதனல் புலனுகிறது. அவனுடைய உணர்வா மாண்டுபோயிற்று?.

உணர்வு'மாண்டது என்பதற்குப் பிறகும் உணர்வு தலைப்பட்ட உரைகள் அவனிடம் பிறந்துள்ளன. உணர்வு மாண்டது என்பது அவனின் கணிப்பு. வெட்டப்பட்ட உறுப்பு, பின்னரும் துடிப்பதைப் போல இந்த உணர்வுத் துடிப்பு வெளிப்பட்டதா? இல்லை. இந்த உணர்வுகளையெல்லாம் அவன் உணர்வுப் பட்டியலிலேயே சேர்க்க வில்லை. பெருஞான நிலையில் ஏற்படும் ஏழாம் அறிவு என்பதைப் போல ஒரு பேருணர்வு தன்னிடம் இருந்ததை அவனே அறிந்து வத்திருந்தான். அது இப்போது செயல்படவில்லை என்பதையும் அது இனிச்செயல்படாது என்பதையும் கண்டுகொண்ட அதே விநாடியில் அதற்குக் காரணம் 'பெற்றமும் கன்றும்' என்பதையும் புரிந்துகொண்டான்.

உணர்வைத் தூண்டுவது அறிவு. அந்த அவசரச் சூழலில் எவ்வளவு ஊக்குவித்த போதும் அறிவும் செயல்பட மறுத்தது. ஆதார காரணமாகிய அறிவே அசைந்து கொடுக்க மறுப்பதால் உணர்வு மாண்டுவிட்டது என்பதுஅவனுக்குஉறுதியாகத் தெரிந்தது. (எந்த விதத்திலோ தவறு நடந்துவிட்டது. பின்னே மநு மன்னன்)

வழக்கென்று நீர் மொழிந்தால் மற்றதுதான் வலப்பட்டுக்
குழக்கன்றை யிழந்தலறும் கோவுறு நோய் மருந்தாமோ ?

என்னும் வினு இந்த மகனின் மனத்தில் உதிக்கவில்லை. அவன் சாமான் மானவனல்லன். சிவம் முயன்று அடையும் தெய்வக்கலைபல திருந்த ஓதியவன். அவனுக்கு இந்த ஐயம் வரவில்லை என்ருல் உணர்வு மாண்டது என்பதுதானே பொருள்? உயிரினும் மேலாகிய உணர்வு மாண்டதை அந்த நிலையிலேயே உணர்ந்த பெருமையையும் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்,

### பிராயச்சித்தம்

பழியை மாற்றுவதற்குப் பிராயச்சித்தம் தேட முயற்சிக்கிருன் மநுவின் மகன். கலைபல திருந்த ஓதியவன் திருமறையவர் முன் சென்ருன். அங்குப் போனதற்கு அவன் சொல்லும் காரணமும்

679

விநோதமானது. 'தந்தைக்குத் தெரிவதற்கு முன்பாக இந்தப் பிராயச்சித்தம் நடக்கவேண்டும்' என்பது திருமறையவர் முன் சென்றதற்குக் காரணம் ஆகும். உணர்வு மாண்டது என்று உணர்ந்தவுடன் மனு மன்னனை 'எங்கோமான்' என்று கூறியவன் இப்பொழுது 'எந்தையார்' என்கிறான். அவன் உணர்வு மாண்டது என்பது இப்பொழுது உறுதியாகிறது.

பிராயச்சித்தங்கள் பிழை செய்தவனின் மன அமைதிக்காக ஏற்படுத்தப்பட்டவையாக இருக்கலாமேயன்றிப் பிழைகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கு அவை எந்த விதத்திலும் நன்மை செய்துவிடப் போவதில்லை. இந்த உண்மையை உணர்த்தவே சேக்கிழார்பெருமான் பிராயச்சித்தம் தேடிப் புறப்பட்டான் மநு மன்னனின் மகன் என்பதோடு அந்தக் கதையை அத்துடனேயே நிறுத்துகிறார். இனி உணர்வுபெற்ற மநுமன்னனின் மகனைக் காண்பதுதான் பொருத்தம்! சாமான்ய நிலைக்கு வந்துவிட்ட இவனை விமர்சித்துக் கொண்டிருக்கத் தேவையில்லை என்பது சேக்கிழார்பெருமானின் திருவுள்ளம்போலும்.

## தொன்னெறி அமைச்சன்

மநு மன்னனுக்குப் பல அமைச்சர்கள் இருந்தார்கள். அவர்களிடத்தில் எந்தக்குறையும் காண்பது அரிது, நாட்டில் நடப்பதை உடனுக்குடன் அறியும் நல்லாற்றல் அவர்களிடம் விளங்கியது. 'எனக்குத் தெரியாது' என்ற வார்த்தைகள் அவர்களுக்குத் தெரியாத. மநுமன்னன் மகன் மறையவர்களிடம் சென்ற அப்பொழுதே தாய்ப்பசு கொற்றவாயில் மணியைக் கோட்டால் துளக்கியது. துளக்குதல் – அதிர்ச்சி செய்தல். மன்னவனும் மந்திரிகளும் கொற்றவாயிலுக்கு வந்தார்களா? கொற்றவாயிலிலேயே நின்றிருந்தார்களா? என்பது சேக்கிழார் விளக்காத புதிராகும்.

'மன்னவன் அதனைக்கேளா வருந்திய பசுவை நோக்கி
என்னிதற்கு உற்றதென்பான்'

என்ற தொடர் சூட்சமமானதாகும். அப்படிக் கேட்கும்போது அமைச்சர்களை அவன் இழிவாகப் பார்த்தான். மநுமன்னன் மனிதர்களுக்கு மட்டும் அரசனல்ல; எல்லாவுயிர்களுக்கும் அரசன். வள்ளுவப் பெருந்தகைகூட முறைசெய்து என்பதற்கு முன்பாக யாருக்கு எவைகளுக்கு என்று குறிப்பிடவில்லை.

என் இதற்கு உற்றது? என்ற கேள்விக்கு மட்டுமல்லாமல் அவன் இகழ்ந்து நோக்கியதற்கும் சேர்த்துத்தான் ஓர் அமைச்சன் பதில் சொன்னான் அந்த அமைச்சனைத் தெய்வப்புலமைச் சேக்கிழார் 'முதிர்ந்த கேள்வித் தென்னெறி அமைச்சன்' என்று அறிமுகம் செய்கிறார்.

## காலில்விழுந்தது ஏன்?

மன்னர்களிடம் பேசும் எவரும் போற்றியுரைகளைச் சொல்லிப் பேசுவது ஓர் மரபு.

'வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை
ஊழிதோ றூழி யுலகங் காக்க'

என்று செங்குட்டுவனைப் போற்றிய செய்தியைச் சிலம்பு சொல்லும். (காட்சி சிலம்பு - 181) மறப்பாட்டுக்கள் நிறைந்த புறப்பாட்டிலும் இந்தமரபை நாம்சுவைக்க நிறைந்த சான்றுகள் உள்ளன. முதிர்ந்த கேள்வித் தொன்னெறி அமைச்சன் 'வளவ' என்று தன் பேச்சைத் தொடங்குகிறான். அவன் போற்றியுரைகள் ஏதும் சொல்லவில்லை பேச்சைத்துவங்குவதற்கு முன்பாக மன்னன் தாளிணை தொழுதான். அதற்கு அடுத்து அவன் சொல்லப்போகின்ற செய்தி தர்க்கத்தால் சுவைக்கத் தக்கதாக இருந்தால் கூட அடிப்படை ஆதாரத்தால் தகர்ந்து போகக் கூடிய வெறும் வெட்டி மாளிகை என்பதை அவனே அறிந்துவைத்திருந்தான். தொன்னெறி அமைச்சனாக இருந்தாலும் இகழ்ந்து நோக்கக்கூடிய நீதித் திண்மை பெற்ற பேரரசன் மநு மன்னன். அவனிடத்தில் ஒரே ஒரு கேள்விக்கு எதிர் நிற்க ஆற்றாத நீண்டதொரு தர்க்கத்தை முன் வைப்பதற்கு மந்திரிமனம் கூச்சப் பட்டது. மன்னன் தாளிணை தொழுது சொல்லியதற்கு அதுவே காரணமாகும். தாளிணை தொழுதற்கு ஒரு வார்த்தையினாலே என்னுடைய வாதத்தைத் தகர்த்து அவமானப்படுத்திவிடாதே என்பது காரணமல்ல; வாதத்தின் எடைக்குறைவை வைத்து மகனை இழந்துவிடாதே என்ற கருணைதான் காரணம்.

நின் புதல்வன் என்று அவன் தொடங்கிய வாதம் இன்னும் கொஞ்சம் அழுத்தப்பட்டிருக்கலாம். அந்த அமைச்சனை விட மநு மன்னன் வாதத்திறமையில் மிக்கவன் என்பதைச் சேக்கிழார் பின்னர் வரும் பாடல்களில் மெய்ப்பிக்கிறார். நின்மகன் என்ற வார்த்தையை அங்கீகரித்து 'என் மகன்' என மநுவே சொல்லும்படியாகச் செய்து விடுகிறார். இந்த வார்த்தை நீதியின் உறைப்பில் நிமிர்ந்துள்ள மநு மன்னனைப் பாதித்துவிடாது. அதைவிட அழுத்தமான ஒரு வார்த்தை உண்டு. 'குலத்துக்கு ஒருமகன்' என்று சொல்லியிருக்கலாம். அதைச் சேக்கிழார் தன்கூற்றாகவே

'ஒருமைந்தன் தன்குலத்துக்குள்ளான் என்பதுமுணரான்'

என்ற தொடரில் சொல்லிக் காட்டுகின்றார். 'ஒரு மைந்தன்' என்ற சிந்தனையே கூட பாதிப்பை ஏற்படுத்த முடியாத திண்ணிய மனத்தில் நின் புதல்வன் என்றவார்த்தைஎந்த பாதிப்பையும் நிகழ்த்திவிடாது.

வாதம் தொடங்கும் போது கேட்பவனுடைய குணங்களை நன்கு கருதித் தொடங்க வேண்டும். நின் புதல்வன் என்பதனை, யார் என்று கூருமல், செய்தியைச் சொல்லி, இறுதியில் சொல்லியிருக்கலாம். மந்திரி மனத்தடுமாற்றம் கொண்டிருந்தார் என்பதைக் காட்டுவதற் காகவே இந்தப்பலஹீன வாதத்தைச் சேக்கிழார் மந்திரி வாக்காக அமைத்தார். எந்த அரசனுக இருந்தாலும் கூடஇகழ்ந்து நோக்கி யவுடன் 'நின்புதல்வன்' என்ற வார்த்தைவருமானல் 'யாராயிருந்தால் என்ன?' என்ற எதிர்வாதம்தான் வரும்!

ஆக, மந்திரியின் தடுமாற்ற நிலை, வாதத்தொடக்கத்திலேயே சேக்கிழாரால் காட்டப்பட்டுள்ளது, எனவே அந்த வாதத்தைஇலக்கி நயத்தால் சுவைக்கலாமே தவிர மநுவின் மனத்துக்கேற்ற வாதமாகக் கொள்ளமுடியாது,

அதைத் தொடர்ந்து வரும் மூன்று பாடல்களிலும் உள்ள கருத்து நலங்கள் இந்த வாதத்தைப் புறக்கணித்துச் செல்கின்றன. இந்த வாதம் மற்ற அமைச்சர்களுக்கும் திருப்தி கொடுக்கவில்லை. தொன்னெறி அமைச்சன் மட்டும் முதலில் காலிலேவிழுந்தான்; செவ்விது என் செங்கோல் என்று துயர் உழந்து நிலை தளர்ந்த மநு மன்னன் காலில் மந்திரிகள் அனைவருமே விழுந்தார்கள்.

## மந்திரியின் தோல்வி

இந்த மந்திரிகள் பசு அரண்மனைக்கு வருவதற்கு முன்பாகவே அரண்மனைக்குள் நுழைந்தவர்கள். அவர்கள் வரும்பொழுதே குழக்கன்றையிழந்தலறும் கோவுறு நோய் அவர்களுக்குத் தெரியும். ஒருவார்த்தை ஒரேயொரு வார்த்தை மன்னனுக்குச் சூசகமாகவேனும் அவர்கள் தெரிவித்திருக்கவேண்டும் முற்றினல்பார்த்துக்கொள்வோம் என்ற எண்ணம் தொன்னெறி அமைச்சன் மனத்திலேயும் எப்படி வேரூன்றியதோ? விஷயம் முற்றிவிட்டது. இந்த அமைச்சன் முதிர்ந்த கேள்வியுடையவன். அதனால் அந்தத் தடுமாற்ற நிலையிலும் அவன் வாயில் வார்த்தை பிறந்தது. அவன் மரபு தெரிந்தவன், அதனல் தர்க்கம் தந்தது. ஆனல் இகழ்ந்து நோக்கிய போது, 'நின்புதல்வன்' என்று வாதத்தைத் தொடங்கலாமா? என்ற சூட்சமம் இரண்டு காரணங்களினல்செயல்படாமல் போயிற்று. ஒன்று முறையிட்டுக்குப் பிறகு அறிவிப்பதால் ஏற்பட்ட உறுத்தல். இரண்டு அனைத்துயிர்க் கும் முறை செய்பவன் மநு என்பதை அறிந்திருந்தும் பிற மன்னர் களைப் போலவே அவனிடம் மனித நீதியைப் பிரித்துச் சொல்ல நேர்ந்த கவலை.

மூன்று பாடல்களினல் மநுமன்னன் தொன்னெறி அமைச்சரை மறுக்கினன். குழக்கன்றை யிழந்தலறும் கோவுறுநோய் மருந்தாமோ?

என்று அவன் கேட்ட ஒரு சாமான்ய நியாயம் நீண்ட நெடுங்காலத் தர்க்க ஞானத்தைத் தகர்த்துவிட்டது. மந்திரியின் வாசகங்களில் தருமத்தைப் பற்றிய கவலை அதிகம் இல்லை. சட்டச் சிந்தனையும் போது மான அளவுக்கு இல்லை. சட்டம் என்பது இழப்புக்குப் பரிகாரம் செய்துவிடாது. பிழை செய்தவர்களுக்குத் தண்டனை கொடுத்தே தீரும். மந்திரி ஒருவழியாகப் பிராயச்சித்தம் என்ற பல்லவியைப் பாடாமல் குறைந்த பட்சத் தண்டனையை அறிவிக்க முயற்சித்திருந் தால் அது நடைபெறாமல் போயிருந்தாலும் 'மன்னனின் மனத்தை உணர்ந்தவர்' என்ற பெருமையையாவது தக்கவைத்துக் கொண்டி ருப்பார்.

'சட்டத்தையும் கருதாமல் நடைமுறையையும் கருதாமல் தருமத்தை யும் கருதாமல் ஆதிமனுநீதியை இவன் அழித்தான் என்ற பழியை எனக்கு ஏற்படுத்துகிறீர்களே' என்று மனுவேந்தன் கேட்ட கேள்வி அழுத்தமானதாகும்.

கன்று இறந்த நிகழ்ச்சி தந்தைக்குப் பழியாகும் என்று உணர்வு மாண்ட நிலையில் மகன் கருதியதோடு 'தொன் மநுநூல் தொடை மநுவால் துடைப்புண்டது' என்ற மநுவின் வாசகங்களை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும்.

## முடிவின் வேகம்:

தன்னுடைய வாதங்கள் சத்தியமானவை என்ற நம்பிக்கையில் மீண்டும் எல்லா அமைச்சர்களுமாகக் கூறிய ஒரு மரபையும் மறுத்து ஒரு மந்திரி தன்னை முன் இவனை அவ்வீதி முரண் தேர்க்கால் ஊர்க என்று தீர்ப்புச் சொல்லி விட்டான்.

இதைச் சொல்லும்போது மநுவின் மகன் அங்கு வந்து விட்டான். இவனை என்பதாலும் இப்பாடலின் இறுதியில் 'தான்கொண்டு' என்ப தாலும் இதனை அறியலாம். 'வளவ! நின் புதல்வ' எனத் தொடங்கிச் செய்தி தெரிவித்த முதிர்ந்த கேள்வித் தொன்னெறி அமைச்சரிடம் இத்தீர்ப்புக் கூறப்படவில்லை என்பது மற்றோர் குறிப்பாகும்.

மன்னவன் மகனை அழைத்தான். மறையவரிடம் சென்றிருந்த மகன் வந்தான். மறைநூல் விளக்கங்கள் முன்னமே மந்திரிகளால் பேசப்பட்டாயிற்று. சிலமணிநேரங்கள் நடக்கவேண்டிய நிகழ்வுகளைச் சேக்கிழார் சில வார்த்தைகளாலேயே துரிதப்படுத்துகிறார்.

கொலைக் குற்றம் புரிந்தவன் என்ற நிலையில் மகன் - அல்ல - ஒரு குடிமகன்! எந்த முறையில் கொலை நிகழ்ந்ததோ அதே முறையில் தண்டனை என்பது தீர்ப்பின் சாரம்!

இது போன்ற தண்டனையை யார் நிறைவேற்றுவது? மந்திரியா? இந்த முறை எங்காவது உண்டா?

அமைச்சரை இகழ்ந்து நோக்கி, அமைச்சர்களை முகம் நோக்கி, முகம் புலர்ந்து செயிர்த்து - இந்தத் தொடர்கள் மந்திரிகளின் வாதங்கள் எதிர் உரைகளால் மன்னவன் கொண்டிருந்த சினத்தைக் காட்டும் 'பசுவின் துயரத்தை 'நானும் அடைவேன்' என்ற மன்னவனின் உரை கேட்டதும் 'அமைச்சரும் அஞ்சினர் அகன்றார். ஒட்டு மொத்தமாக அமைச்சர்கள் மன்னவனின் தீர்ப்பையும் ஏற்கவில்லை, அல்லது இசையவில்லை. இந்தச் சூழ்நிலையில் அமைச்சர்கட்கு ஒரு தண்டனை அளிப்பது போல அவர்களின் சார்பில் ஒரு மந்திரிக்கு இத்தண்டனையை நிறைவேற்றுவதைக் கடமை ஆக்கி உத்தரவு செய்கிறான் மநுவேந்தன்.

அமைச்சன் அதைச் செய்யவில்லை, உயிர் துறந்தான் - சேக்கிழார் அன்னவனும் அது செய்யாது அகன்றுதன் ஆருயிர் துறப்ப என்று ஒரே வரியில் முடிக்கிறார். மகனால் கன்று இறந்தது? அரசன் ஆணையால் அமைச்சன் சாகவில்லையா? இதை எந்த வகையில் சேர்ப்பது?

இதற்கும் அவன் சிந்தனை துணியும்! முதல் கொலைக்குத் தண்டனை நிறை வேற்றிய பின் என்ன நடக்குமோ? அமைச்சன் இறப்புக்காகத் தன்னையே மாய்த்துக் கொள்ளவும் மநு தயங்க மாட்டான். ஆனால் உடனே அதைச் செய்ய முடியாது! பசுபடும் துயரை நான்படுகிறேன் என்ற வாக்கை நிறைவேற்ற வேண்டும்.

சிக்கல் இந்த அளவுக்கு முற்றிய பிறகே முதல் அறிவுப்பு நிறை வேற்றப்பட்டதும் சிவன் வெளிப்பட்டு இறப்புகளை இல்லை என்றாக்குகிறான். 'மந்திரியும் உடன் எழலும்' என்ற உம்மையில் இப்படி ஒரு நயம் இருந்து நம் இதயத்தை மகிழ்விக்கிறது.

மநுமன்னனின் மந்திரிகள்
'எவ்வுலகில் எப்பெற்றம் இப்பெற்றித் தாம் இடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி எறிந்து விழுந்தது'

என்று மநுவேந்தன் 'ஈசன் பசுவாக எமன் ஒரு கன்றாக' வந்ததை, உணர்ந்து கேட்ட கேள்வியையும் உணராதவர்கள் ஆயினார்கள். எனினும் 'இழந்தது இனிவராது. அதற்காக இன்னொரு நல்லதை இழக்கக் கூடாது' என்ற நல்லுணர்வு தலைப்பட்ட நல்லவர்களாக விளங்கினார்கள். அரசர் சீறிலும் உறுதி உரை செய்தார்கள்.

# விடையரங்கம்

**வினா :** மடம் என்பது என்ன? அதன் வரலாறு என்ன? அப்பிச்சியார் மடம் என்ற பெயரில் ஒரு கோயில் உள்ளதே? — ஏ, கந்தசாமி, திருப்பூர்.

**விடை**

மடு என்னும் வினைச்சொல் உண்ணு என்று பொருள்படும். மடு என்பதோடு ஐ-விகுதி சேர்ந்து மடை என்ற சொல் உண்டாகிறது. மடை என்ற சொல் உணவு என்று பொருள் படும். இச்சொல் சிறப்பாக இறைவனுக்குப் படைக்கும் நிவேதனத்தைக் குறிக்கும். கோயில்களில் உள்ள மடைப்பள்ளி என்ற இடத்தில் நிவேதனம் தயாரிக்கப்படுவதாலும் மடை என்பது நிவேதனம் என்பதை அறியலாம்.

இனி, மடு என்ற வினைச்சொல் பருகு, ஏற்றுக்கொள் என்ற பொருள்களையும் தரும். மடு என்பதோடு அம்-விகுதி சேர்ந்து மடம் என்றசொல் உண்டாகிறது. மடம் என்ற சொல் உண்ணும் இடம் என்ற பொருளையும் ஞானஉபதேசங்களை ஏற்றுக்கொள்ளும் இடம் என்ற பொருளையும் தரும்.

அடியார்கள் உணவு உண்ணவும், தங்கவும் வேண்டி மடங்கள் கட்டப்பெற்றன. மடங்கள் என்பவை மிகப் பழங்காலந் தொட்டு இருந்து வருகின்றன.

திருவதிகையில் சித்தவடமடம் என்று ஒரு மடம் இருந்தது. இங்கே திலகவதியார் தங்கியிருந்து அதிகை வீரட்டத்தில் தொண்டு செய்து கொண்டு இருந்தார். மற்றும் இதேமடத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஒருநாள் இரவு தங்கி இருந்தார், மதுரையில் உள்ள மடத்தில் ஞானசம்பந்தரும் அடியார்களும் தங்கி இருந்தார்கள். அப்பர் சுவாமிகள் திருப்பூந்துருத்தியில் திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம் ஒன்று கட்டினார். மற்றும் பல ஊர்களிலும் மடங்கள் இருந்தன-இவ்வாறு பெரியபுராணம் தெரிவிக்கிறது.

திருவொற்றியூரில் இருந்த மடத்தில் வாகீச பண்டிதர் என்பவர் சைவ சித்தாந்தத்தை விளக்கி உரையாற்றி வந்தார் என்ற செய்தியைத் திருவொற்றியூர் கல்வெட்டு அறிவிக்கிறது.

சில மடாலயங்களில் குரு சிஷ்ய பாரம்பரிய முறையில் ஞானிகள் எழுந்தருளி சைவ சித்தாந்த மெய்ப்பொருளைத் தக்க மாணக்கர்களுக்கு உபதேசிக்கிற வழக்கம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது,

இதனால் மடங்கள் என்பவை அடியார்கள் உணவருந்தவும், தங்கி இருக்கவும் வேண்டி ஏற்பட்டன என்பதும், அம்மட்டோடன்றி சமய போதனைகளை வழங்குவதற்காகவும் அவை ஏற்பட்டன என்பதும் நன்கு விளங்கும்

மடங்கள் வகதிமிக்க அடியார்களாலும், தரும சீலர்களாலும், ஞானிகளாலும் தோற்றுவிக்கப் பட்டன என்பதற்குச் சான்றுகள் உள்ளன

திருக்கடவூரில் குங்குலியக்கலயர் ஒரு மடத்தைத் தோற்றுவித்து பராமரித்து வந்தார். இங்ஙனம் அடியார்கள் மடங்களைப் பரா, மரித்து வந்ததைப் பெரியபுராணம் கூறுகிறது.

திருவீழிமிழலை, திருமறைக்காடு, மதுரை முதலிய இடங்களில் மடங்கள் இருந்ததைப் பெரியபுராணம் தெரிவிக்கிறது. இந்த மடங்கள் அவ்வூரிலிருந்த செல்வந்தரான வள்ள்ல்கள் முதலியோரால்-தருமசீலர்களால் - பராமரிக்கப் பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

நாயக்க வம்சத்தைச் சார்ந்த அக்காள், தங்கச்சி என்ற இரு பெண்மணிகள் இராமேசுவரம் செல்லும் வழியில் இரண்டு மடங்கள் கட்டினார்கள் என்று நாயக்கர் வரலாறு கூறுகிறது. இம்மடங்கள் இப்போது இல்லை, ஆனால் அக்காள் மடம், தங்கச்சிமடம் என்ற பெயரில் ஊர்கள் வழங்கிவருகின்றன.

தற்காலத்தில் உள்ள சைவ மடாலயங்களால் சைவ சமய போதனைகளும், சமயநூல் வெளியிடலும் முதலான சமயப்பணிகள் தொன்றுதொட்டு நடந்து வருகின்றன. மற்றும் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், மருத்துவமனைகள் முதலியவற்றை பராமரிக்கின்ற சமூக நலப்பணிகளும் செய்யப் பெற்று வருகின்றன.

அப்பிச்சியார்மடம் என்பது அப்பிச்சியார் என்ற பெயருடைய தருமசீலரால் கட்டப்பட்ட மடமாக இருக்கவேண்டும். அப்பெயர் அந்தமடம் இருந்த ஊருக்கு உரிய பெயராக வழங்கத் தொடங்கி இருக்க வேண்டும். இவ்வாறு ஊகிக்க முடிகிறது.

மற்றும் அப்பிச்சியார் மடம் பற்றிச் சதாசிவபண்டாரத்தார் எழுதியதாக எதுவும் தெரியவில்லை.

தா ம வெள்ளைவாரணம்

---

குறிப்பு: இத்தகைய சமயம் சார்ந்த வினாக்கள் வருமாயின் மதுரகவி திருமுறைச் செம்மல் பேராசிரியர் தா.ம. வெள்ளைவாரணம் அவர்கள் விடையரங்கம் பகுதி வாயிலாக விடைதருவார்கள். வினாக்கள் திருக்கோயில்கள் சாத்திரங்கள், சமய இலக்கியங்கள் பற்றிய ஐயவினாக்களாக இருப்பது நலமாகும்.

# நூல் நிறை

## 1 ஞான விளக்கம்

[ ஆசிரியர்:- மயிலாடுதுறை பா. கமலக்கண்ணன்
பக்கம் - 38 விலை ரு 3/-

வெளியீடு கிடைக்குமிடம்

க. விட்டோபாய், லூய் பிரகாசம் தெரு
பாண்டிச்சேரி-605001

சமய தத்துவங்கள் என்பவை யாவை? அவை, துவாந்த சாந்தப் பெருவெளியில் உள்ளவை; நமது அறிவின் எல்லையில் பிடிபடாதவை; இது பெரும்பான்மையோரின் விடையாக அமையும்,

"இல்லை இல்லை; அவை ஆழ்ந்து சிந்தித்துப் புரிந்து கொள்ளக் கூடியவையே: என்பதை உணர்த்தும் நூலாசிரியரின் எளிய கவிதை வடிவினல் முந்தைய விடை பொருந்தாததாகிறது.

தருமை,காஞ்சி முனிவர்களால் பாராட்டப்பெற்ற, நூல் என்பதே அதன் மெய்ப்புகழை மேன்மை செய்வதாக அமையும்

வருவாய்த்துறைப் பணிக்கிடையில் நூலாசிரியரின் இச் சமய இலக்கியப்பணி வியப்பை மிகுவிக்கிறது.

நல்ல அரிய கருத்துக்களடங்கிய நூல்

## 2 சிவஞானபூஜா மலர்

(குரோதன 1985)

[பிரசுரம் ; ஆங்கிரஸ S வெங்கடேச சர்மா 5-டெலி போஸ்ட் - காலனி குறுக்குத்தெரு, மேல மாம்பலம் சென்னை-600 033 பக்கம் 384: விலை ரு 12

எங்கும் உள பரம்பொருளின் பரத்துவ மேன்மையே எங்கெங்கும் துளும்பி வழிவதாக அமைகின்றது மலர்.

ஆண்டு முழுமையும்போற்றி மொழிகளைச் சொற்பெருக்குகளின் வழிசார்த்துகின்ற ஆசிரியர் 'மலர்' வடிவில் பல்வகை சமய இலக்கிய மலர்கள் கோர்க்கப்பெற்ற சரமணிமாலையைப் பெருமானுக்குக் காணிக்கையாக்குகின்றார்.

பல சிந்தனை ஆறுகள் பெருக்கெடுத்துள்ளன; எம்பிரான் பொருள்சேர் புகழாகிய ஆழ்கடலில் அவை அனைத்தும் ஐக்கியம் ஆகின்றன; இடையில்தான் எத்தனை 'துறை'கள்.

தமிழ் இலக்கியங்களில் மட்டுமன்று: வடமொழி நூல்களிலும் 'பெருமான்புகழ்' எங்கெங்கு மொழியப்பட்டுள்ளனவோ அவை அவ்வணமே தொகுத்தும், பெயர்த்தும் தரப்பட்டுள்ளன.

பதினோராந் திருமுறை நூல்கள் தொடர்ந்து உரைவிளக்கம் செய்யப்பெறும் என்பது சமய அன்பர்கட்க்குச்சந்தோஷம் உண்டாக்குவதாகும்.

பல இலக்கிய அறிஞர்களின் சிந்தனைகள் இங்கு பிரவாகம் எடுத்துள்ளன. இதைத் தோய்ந்து படிப்பவர்க்குப் பக்தியும், இலக்கிய உணர்வும் அகத்தே பிரவகிக்கும் என்பது உண்மை.

தக்கபணி: பாராட்டிற்குரிய சமய இலக்கியப்பணி; என்று பாராட்டுவதோடு நின்று விடாமல் நூலை வாங்கியும் நமது பங்குத் தொண்டைச் செய்யவேண்டும்.

பனைசை சாமிநாதன் எம். ஏ, பி. எட்,



# இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்



## பல்வலிக்கு

1] உப்பை சட்டியில் போட்டு வறுத்து இளஞ்சூடாக வலியுள்ள இடத்தில் வெளிப்பக்கம் ஒத்தடம் கொடுக்க வலி நிற்கும்.

## நகச்சுத்து

2] உப்பு, வெங்காயம், சுடுசோறு இம்மூன்றையும் சமமாக எடுத்து தண்ணீர் விட்டு மைபோல் அறைத்து நகச்சுற்றில் கட்ட குணமாகும்.

## பித்த வாந்தி எடுக்க

3] ஒருபிடி உப்பை முருங்கைக் கீரையுடன் சேர்த்து அதன் சாற்றை எடுத்துக் குடிக்க வாந்தி எடுக்கும். அத்துடன் பித்தமும் வெளியேறும்.

Dr N சடையப்பன் S M. P.

ஒழுங்குற அமைந்த உண்டியும், உறக்கமும் பிரம்மச்ரியமும் ஆரோக்கிய வாழ்விற்கு மூன்று தூண்கள்.

— சரகர்

ഖ

Siva Siva

# Thevara Goshti-Mahasivaratri Festival

# KALAHASTI

Conducted according to the orders of His Holiness Sri la Sri KASIVASI MUTHUKUMARASWAMI THAMBIRAN SWAMIGAL AVERGAL Head of Sri Kasi Mutt, Tirupanandal [Thanjavur Dt]

From 7....3....86 to 12...3....86

The Siva Shrine at Kalahasti is one of the shrines sanctified by the Hymns improvised by the three Great Saiva Saints Thiru gnanasambandar, Thiunavukkarasar and Sundarar, A spider, a cobra and an elephant attained salvation by worshipping the Lord and hence the Kshetra got the name Sri Kalahasti. It is one of the Pancha Bhoota Kshetras-Vayulinga where Kanna ppa Nayanar attained beatitude in six days. In such a famous Kshetra a Thevara Goshti will be conducted for six days from 7....3...86 to 12...3...86 during the Mahasivaratri Festival of Sri Kalahastsdiswaraswami Devasthanam at Kalahasti and the names of the Thevara Hymnists are given below;-

Suralaya isaivallal
Thiru. *M. Kanagasabai Pillai* Chidambarm
Thevaramani Thiru *A. Sattayppa Odhuvar.* Mailam
,, ,, *P. Chokkalinga Odhuvar* Kalahasti
,, ,, *S. Thirnavukkarasu Desikar* Thiruvannamalai.
Thiru *R. Jayaraman* (Harmonium)
Mirulanga Vidwan Thiru *G. Ramasamy Pillai* Chidam [baram

MAY SIVA BLESS ALL

Sri *K BASAVAPUNNARAO* B. com
Asst Commr-Executive Officer
Sri Kalahastiswaraswami Devasthanam
KALAHASTI
Andra Pradesh

*K SUBRAMANYAIYER* B. A
"Thiagaraja Vilasam"
62, PillaiyarKoil Street
Triplicane P. o
MADRAS-600 005

# திருஞானசம்பந்தர் தேவாரத்தில் இயற்கை



சொ. இரவி, எம்.ஏ., எம். பில்.,

இறைகளோடு இயைந்த இன்பம் - இன்பத்தோடிசைந்த வாழ்வு இயற்கை தந்தது. உண்மையில் இயற்கைச் சூழலில் பழகி விட்டால் எந்த தீமையும்உடலை - உள்ளத்தைப் பற்றுது. இயற்கை வைத்தியமானாலும் - இயற்கை வாழ்வானாலும் - அதுவேஉடலுக் கேற்றது. எனபர். இயற்கை கற்றுத்தரும் அறிவோஏராளம் ஏராளம் - '[Let nature be our teacher]' என்பர்.

ஆதி மனிதன் கையது கொண்டு மெய்யது பொத்தி - காலது கொண்டு மேலதுதழீஇ - வாழ்ந்து - உடல் உரம் பெற்றிருந்தான். பச்சையாக உண்ட உணவால் பல் முதலிய கருவிகள் உரனுடன் இருந்தன. குளிர் 'கா'விலாடி - அருவியில்மூழ்கி, வெயில் - மழை - பனி காலங்களுக் கேற்றவாறு வாழ்ந்து ஆசை கோபம் தாபம் - இவற்றை அடக்காமலும் - அதிகம் மேற்கொள்ளாமலும் ஆரோக் கியமாய் வாழ்ந்தான். இன்று நாம் எல்லாவற்றிலிருந்தும் இறைவன் ஒதுங்கி விட்டோம். எத்தனை கோடி இன்பம் வைத்திருக்கிறான். பொன்னைய் - மணியாய் - போகமாகி நிற்பவனை - வாழ்த்தக் டகூ வகையறியோம் - என்னைய் என்னைய் - என்னினல்லால் ஏழையேம் - ஏத்துவது - தான் எப்படி!

நதியாய் நீள்வயலாய் - நீலவானைய் — நீள்கடலாய் — அலையாய் அழகாய் - அமுதாய் இருக்கும் இயற்கையை எப்படியெல்லாம் தேவார ஆசிரியர் திருஞானசம்பந்தர் போற்றியுள்ளார்கள் என் பதை இங்கே காண்போம்.

**சங்க இலக்கியமும் இயற்கையும் : -**

பத்துப் பாட்டில் கைபுனைந்தியற்றுக் கவின் பெருவனப்பை நக்கீரரும் கபிலரும் போட்டி போட்டுக் கொண்டு பாடுகின்றனர். இயற்கையை அதன் இதயமுணர்ந்து - இயல்பு மாறுமல் பாடுவது ஒரு அரிய கலையே.

உதாரணமாக, 'தாமரையின் புறவிதழ் போன்ற முயற்காது என்பது - 'இலவம் பஞ்சு வெடித்தது போன்ற - அணிற்பிள்ளை முதுகின்கோடு' என்பது - போன்றனவும்,

'மீனுண் கொக்கின் தூவியன்ன வால்நரைக் கூந்தல்'

'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல் - கயமூழ்கு மகளிர்கண் என்பன,

'ஆம்பற்பூவின் சாம்பலன்ன - கூம்பியசிறகர்மனையுறைகுரீஇ -
கருங்கால் வேங்கை வீயுகு துறுகல் இரும்புலிக்குருளை -

என்பனவும் எண்ணுதற்கு இன்பம் தருவன.

தேவார காலம் :- சங்ககால இயற்கை வருணனைகள் - சில இயற்கையை மட்டுமே காட்டுவதாக - சில இறைவனை இணைத்து எண்ணத்துணை செய்வதாக மட்டுமே இருக்க —

தேவார காலத்தில், அதாவது 6—9 நூற்றுண்டுகளில், 'எங்கெங்கு காணினும் சக்தியடா' - என்றது போல - அங்கிங்கு எனாதபடி எங்கும் இயற்கையையும் இறைவனையும் இணைத்தே கண்டனர்.

மேகம் மூடிய மலை - கரியுரி போர்த்த சிவனாக முன்னிக்கடலைச் சுருக்கி எழுந்த மேகம் - உமையவளாகக் காட்சி தந்தன. மனித உணர்வுகள் இயற்கையோடு நெருங்கிய இயல்பு இது. டாக்டர் மு. வ. இதனைக் குறிப்பிடுகிறார் தமது - The treatment of nature in Sangan Literature' - என்ற நூலில்,
[கழகப் பதிப்பு - 1957 - பக் - 2 - 3]

"Jn Short, they unit together the feelings of man and the beauties of nature in closest bonds and war mest associations"

சம்பந்தர் பிறந்த ஊர்:- இயற்கையில் ஊறித்திளைத்த சம்பந்தர் உள்ளமறிந்தவராக - சேக்கிழார் அவர் பிறந்த கழுமலத்தின் இயற்கையை - நாவில் சராசரங்களும் சிவம்பெருக்கும் காட்சியை - முதலாவதாகக் காட்டுகிறார்.

"பரந்த விளைவயல் செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில் வளர்தேமாவின் கனிகிழிந்த மதுநறு நெய்
நிரந்தரம் நீளிலைக் கடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும் ஆகுதிவேட்கும் தகையவென மணந்துளதால்"

மரங்களே - 'யாக'ம் செய்கின்றன - மக்களின் பண்பை நாடு ஊர் பிரதிபலிக்கும் வகை இது

மலையை - நாட்டை மக்கள் பிரதிபலிக்கும் அழகுண்டே! தெரியுமோ!

கோட்டுவளம் முலை காட்டும் கொடியின் வளம்
இடைகாட்டும் குறிஞ்சி பூத்த
காட்டுவளம் குழல் காட்டும் மலை வளந்தான் —
நீயுரைத்துக் காட்டுவானேன் —

she is an.- epitone of nature — படித்து ரசிக்கலாம்.

வீறதேறும் தமிழால் பாடிய வீரர் :-

'ஆறதேறுஞ் சடையான் அருள் மேவ அவனியர்க்கு
வீறதேறுந் தமிழால் வழிகண்டவன்' — என்று சம்பந்தரைப் பாராட்டுவார் நம்பியாண்டார் நம்பிகள்.

'வீறுயர் கலச நன்னீர்' - என்ற சிந்தாமணித் தொடருக்கு 'நச்சர்' உரைகண்ட வழியிலேயே 'வேறொன்றற் கில்லா அழகு' - பெற்ற தமிழ் - என நாம் பெருமை கொள்ளலாம்.

அருண்மாலைத்தமிழ் - கலைமலி தமிழ் - குன்றாத் தமிழ் - ஞானத் தமிழ் திருநெறியதமிழ் - பலமிகுதமிழ் - மறையிலங்கு தமிழ் - விலையுடை அருந்தமிழ் - தனது நூலைத்தானே - இப்படிக் கூறுவார் இவ்வளவும் பொதுளுமாறு -'நம்பி' தந்த அடைமொழி சாலப் பொருந்தி மகிழ்விக்குமாறு - இனிக்காண்போம்.

பாடும் பொருளும் பாட்டின் அழகும்: -

1. கவிஞர், G. முர்ரே கூறினன்— 'கவிதையின் அழகு கவிதையில்தான் உள்ளது – அது கூறும் பொருளிலன்று' - என்று இது வேண்டுமானால் சாமானியக் கவிஞனுக்குப் பொருந்தும். சம்பந்தர் தமிழில் பாடுபொருளும் அழகே - பாட்டும் அழகே.

வேங்கையும் வேங்கையும்: —

சங்க இலக்கியங்களில் பயிலும் காட்சி ஒன்றுண்டு. வேங்கை மரத்தின் மலர்கள் (பொன்னிறமானவை) கீழே உதிரும். மரத்தடியில் கிடக்கும் பாறையில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிய வகையில் – அப்பாறை அரைகுறை ஒளியில் வேங்கைப் புலிபோலக் காட்சி தரும்.

---

1. The beauty of the poem is the poem itself, not in the thing described by the poem.
— G. Murray - 'The classical tradition in poetry' — p-131

தேவாரத்தில் இதே கற்பனை இதே அழகோடு வெளிப்படுகிறது. மற்றவர்களாக இருந்தால் படித்தவாசனை - தாக்கம் என்று விடலாம். உவமையிலாக் கலைஞானத்தையும் உணர்வரிய மெய்ஞ்ஞானத்தையும் உமை முலைப்பாலால் பெற்றவரை – எப்படி நினைப்பது. ஒத்த கருத்துக்கள் உயர்ந்தோர் சிந்தனையில்-ஒரே வகையாகத் தோன்றும். (Great men think alike) என்பதே உரிய சமாதானம்.

"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையில் தோன்றும்" — குறுந் 47
"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட் டொள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறங் கடுக்கும்" — — புறம் 202.

உடைந்த காற்றுக் குயர்வேங்கை பூத்துதிரக் கல் அறைகள் மேல்
கிடந்த வேங்கை சினமாமுகம் செய்யும் கேதாரமே — சம்பந்தர்

மணம் செயும் பருவம்:- வேங்கைபூக்கும் காலமே-தினை முதிரும்காலம் தினை முதிர்ந்தவுடன் - அறுவடை - பின்னர் அந்தச்செல்வம் – கொண்டு திருமண காரியங்களைப் பழங்காலத்தில் செய்வர். இதனைத் "தீத்தீண்டுகையார் பிரிவித்தல் காண்!" — எனக் குறிப்பர் குறிப்பு மொழியாக. தீயைத் தீண்டினால் – கைவேம் அல்லவா - அதுதான் வேங்கை - நம்மை அதுவன்றோ பிரிக்கின்றது - எனஅந்தரங் சமாகக் காதலர் பேசிக்கொள்வர். இதனைக் காளத்திமலைபதிகத்தில்.

"புலவர்புன மயிலனைய மாதரொடு மைந்தரும் மணம்புணரு நாள்
கனகமென மலர்களணி வேங்கைகள் நிலவுகாளத்தி மலையே —"
தமிழாகரர் குறிப்பிடுகிறார்.

**தம்மாலியல் உதவி தாம் செய்வர் : –**

பெரியோர் தம்மாலியன்ற உதவியைத் தப்பாது செய்வர். பயனைத் - தம்மிடம்வருவோர்க்குப் பயன் கருதாமல் செய்வதே பெரியோரின் தன்மையாகும். 'கரப்பவர் தங்கட் கெல்லாம் கடு - நரகங்கள் வைத்தார், - என என அப்பர் பெருமானும் அச்சுறுத்தி அறிவுரை செய்தார்.

சம்பந்தர் தேவாரத்தில் ஒரு காட்சி.
1 "தேமாங்கனி கடுவன்கொள விடுகொப்பொடு தீண்டித்
தூமாமழை துறுகல்மிசை சிறுநுண்துளி சிதற
ஆமாம்பிணை அணையும் பொழில் அண்ணாமலை —"

1. திருஞானசம்பந்தர் – 1- 10- 2.

மாமரம் தேம்பழத்தைச் சுமந்து நிற்கிறது. அதைக் கண்ட கடுவன் தாவி அதனைப் பறிக்கிறது. உயரமாக இருக்கும் கிளைவளைய - இது பழத்தைப் பறித்துப் பின் விடுகிற... விட்ட குதிரை விசைத்து நிமிர்வது போல் - கிளை விண்ணில் சென்று கருக்கொண்ட மேகத்தை அலைக்கிறது. மேகத்திலிருந்து நுண்துளிகள் பாறையில் சிதறுகின்றன. இப்படியான அண்ணுமலை - என இந்த அளவில் வருணனையை வருணித்துக் காட்டுகிருர் திரு. டாக்டர். சொ. சி அவர்கள்[2].

இதற்கு மேலும் சென்று இன்னெரு நயம் காண முயலலாம். அதாவது - மரம் பழத்தை உதவியது - முதல் உதவி, பழத்தைக் கொடுத்த பின்பும் - அம்மரம் பிறிதொரு உதவி செய்ய முந்துகிறது. அதாவது ஏதுமற்ற நிலையிலும் - பெரியர் உதவவே எண்ணுவர். அது போல இதனை இன்னெரு காட்சியாலே - பரஞ்சோதியார் காட்டுவார்.

> '[3] மலர்ந்தசெவ் வந்திப்போதும் வகுளமு முதிர்ந்து வாடி
> உலர்ந்துமொய்த் தளிதே னக்கக் கிடப்பன வுள்ள மிக்க
> குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினும் தம்பாலில்லென்
> றலர்ந்தவர்க் குயிரை மாறி யாயினுங் கொடுப்ப ரன்றோ'

செவந்தி - மகிழம்பூ இவைகள் மலர்ந்து - மணம்பரப்பின - வாடிக்கீழே விழுந்தும் - அளிகள் நக்கும்படி தேனைத் தம்மிடம் கொண்டுள்ளன - பெரியோர்கள் - உயிரை விற்ரே - விட்டோ உதவலையே பெரிதாகக் கருதுவர் - அது போல என்ருர்.

இப்படி ஞான...ந்தரும் - பழம் தந்த கொம்பு - பின்னேயும் ஒரு பயன் தந்தது என்கிருர். ஆமாவின் பிணை - ஊடல் கொண்டது போலும். எங்கோ தள்ளிச் சென்று மேய்ந்து கொண்டிருந்தது. திடீரென்று மழைத்துளிகள் சடசடவென்று விழவே - அஞ்சியது. அச்சம் - கோபத்தைவெல்ல ... ... அருகுவந்தணைந்தது ... ஆமாம்... ஆமாவை அணைந்த பின் ஆமாம்பிணையாயிற்று [ஆமாப்பிணை - எதுகைக்காகத் திரிந்தது].

அழகைப் பருகிப் பருகி அதனால் உண்டான போதையிலேயே கவிஞன் கண்ணை உருட்டுகிருன். அந்தக்கண் விண்ணிலிருந்து மண்ணுக்கும் - மண்ணிலிருந்து விண்ணுக்கும் பாய்கிறது. மண்ணையும் விண்ணையும் அளக்கும் ஆற்றல் - இந்தக் 'கவிதைக்கண்' காரனுக்குத் தான் இருக்கமுடியும்.

---

2. திருஞான. வரலாற்ருராய்ச்சியும் தேவாரத் திறனய்வும்.
   – Dr. திரு. சொ. சிங்காரவேலன் - பக் - 227.
3. திருவிளை ... தருமி ... ... ... படலம் — பா - 17.

இதையே மகாகவி Shakespeare எடுத்துக்கூறுகின்றார்.
'The poet's eye, in a fine frenzy rolling; doth glance from Heaven to earh and Earth to Heaven ."

இப்படியாக நவில்தொறும் நூல்நயம் தரும் கவிதைகளைத் தான் மாதுளங்கனி - என்பார்கள்.

ஞானசம்பந்தர் பாட்டில் சமாகிதமென்ற அணி இருப்பதைக் காண " அது இன்னொரு விருந்தாகும்.

'முந்துதான் முயல்வுறுந் தொழிற்பயன் பிறிதொன்று

தந்ததா யுரைப்பது சமாகிதமாகும்'

- தண்டியலங்காரம்

ஆமா ... தன்பிணையின் கோபத்தைத் தணிக்கப் பலவாறு முயன்றிருக்கும். ஒன்றும் கைக்கூடவில்லை. ... ... ... ஆதலால் காதல் கூடவில்லை. மாங்கொம்பு - மேகத்தைத் தட்ட .. ... மழைகொட்ட ... அப்புறம் என்ன இன்பம் இன்பந்தானே!

ஆளியைக்கண்டஞ்சும் யானை : - சில விலங்கின இயல்புகளை உணர்ந்து -இயற்கை தோன்றப்பாடியுள்ளார். யானை பரியதானாலும் கூர்ங்கோட்டதானாலும் புலிதாக்க - வெருவும் என்பது உண்மை. சிங்கம் மறைந்திருந்து பின்புறமாகத் தலையிலேறி-அடித்து - மத்தகச் சோற்றை உண்பதால் - சிங்கத்தைக் கனவில் கண்டாலும் அலறும் களிறு. (இதனையே சிம்மசொப்பனம் என்பர்.)

சிங்கத்திலும் வலிமையுடையது யாளி - அதனைக் கண்டஞ்சக் கேட்பானேன். யாப்பருங்கலக்காரிகை - மேற்கோளில்

தாளாளரல்லாதார் தாம்பலராயக்கால் என்னும்என்னும்
ஆளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோல் சாய்ந்துவிழும் பீளிற்றியாங்கே - வருவதுகாண்க

சங்க இலக்கியத்துள் - பெரும்பாணாற்றுப்படையில்,

மழைவிளை யாடும் கழைவளர் அடுக்கத்து
அணங்குடை யாளி தாக்கலின் பலவுடன்
கணஞ்சால் வேழம கதழ்வுற் றுஅங்கு
எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை — 257 - 260 பக்.

இதற்கேற்ப தேவாரச் செய்தியும் வருகிறது.

மத்தக் களிருளி வரவஞ்சி மலைதன்னைக்
குத்திப் பெருமுழை தன்னிடை வைகும் கொடுங்குன்றம்

இப்படியாக குரங்கு முதலிய செய்திகளும் கூட - சங்க இலக்கியக் கருத்துக்களோடு இணைந்து திகழ்கின்றன.

நமக்கும் நகை வருகிறது :-

நகை - யென்ற மெய்ப்பாடு நான்கின் அடிப்படையில் - வரும்
'எள்ளல் இளமை பேதமை மடனென்று
உள்ளப் பட்ட நகைநான் கென்ப' - தொல் மெய்ப்-

தொல் – மெய் –

பேதைமை - மடமை காரணமாக வரும் நகை – குற்றமில்லாதது யார் மனதும் நோகாமல் வரும் இந்நகை - இன்னகையாகும்.

(வளரும்).

## ஆலயபூஜைப் படிக்காசு நிதி

### நன்கொடை அளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| முன் இருப்பு | | 25119—00 |
| திரு. கைலாசம் உக்கரை. | ரூ | 5—00 |
| சு. ஜெகதாம்பாள் திருப்பனந்தாள் | ரூ. | 3—00 |
| திரு கணேசன் பாண்டிச்சேரி. | | 30—00 |
| திரு. இல. வைத்திலிங்கம் காரைக்குடி. | | 10—00 |
| திரு. S. ஆறுமுகம் பிள்ளை ஸ்ரீவைகுண்டம் | | 26—00 |
| திரு. V. சிவராம சாஸ்திரி திருவொற்றியூர் | | 71—00 |
| ஆக ரூ. | | 25264—00 |

| | |
|---|---|
| 1) தலச்சங்காடு ஸ்ரீ தங்காரண்யேஸ்வரர் ஆலய செலவு. | 90—00 |
| 2) சேங்கனூர் ஸ்ரீ சற்குணேஸ்வரா ஆலய செலவு | 80—00 |
| 3) கும்பகோணம் ஸ்ரீ பாணபுரீஸ்வர சுவாமி கோவில் செலவு | 75—00 |

உ

சிவ சிவ

# மதுரையில் மகா சிவராத்திரி தேவார விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21வது அதிபர்

கயிலைமாமுனிவர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

ஆணையின்வண்ணம் நடத்தப்பெறுவது

குரோதன ஆண்டு மாசி மாதம்24-ம் நாள ]8—3—86]சனிக்கிழமை

மாசி மகா சிவராத்திரி

**திருமுறைவாணர்கள்:-**

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்

1. திரு T M. சிவலிங்கம் சபாபதி சகோதரர்கள், திருவாவடுதுறை.

கலைமாமணி, தேவார இசைமணி

2 S. முத்துக்கந்தசாமி ஓதுவார், திருச்சி.

திருநெறிய தமிழ்மணி

3. திரு. தா. குருசாமி தேசிகர், மதுரை.
4. தேவாரமணி திரு ஆ. சோமசுந்தர ஓதுவார் ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி,மதுரை.
5. தேவாரமணி திரு. கு. மணிகண்ட ஓதுவார், மதுரை.
6. தேவாரமணி அரு திருஞானசம்பந்தன், மதுரை.
7. பிடில் சு. சாமிநாதன், மதுரை.
8 திரு ஆர். மாரியப்பன் மிருதங்கம்,தில்லையாடி

திருப்பனந்தாள் — ஆணைப்படி

28 .. 1....86 — சிவ. குஞ்சிதபாதம்

மானேஜர் ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள்

---

குறிப்பு: மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மன் சன்னதி ஸ்ரீ சித்திவிநாயகர் திருமுன்பு இரவு 8 மணிக்குத் தொடங்கி சிவமே நிலவும் ஆடி நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவாணர்கள் திருமுறை ஓதி காலை 6மணிக்கு ஸ்ரீமீனாட்சியம்மன் சன்னதியில் நிறைவு செய்வார்கள்

# திருஞானசம்பந்தர் தேவாரம்
## "பாடியவாறு அட்டவணை"

| தொடர் எண் | திருத்தலமும் பாடிய இடமும் | பெரியபுராணச் செய்யுள் எண் | பதிக முதற்குறிப்பு |
|---|---|---|---|
| 154 | தலையாலங்காடு பணிந்து பாடி | 573— | ... ... ... |
| 155 | பெருவேளூர் பணிந்து பாடி | 573 | – அண்ணாவும் |
| | [சாத்தங்குடியில் நண்ணி 573 ] | | |
| 156 | கரவீரம் | 573 | – அரியும் நம்வினை |
| 157 | விளமர் | 573 | – மத்தகமணிபெற |
| | [திருவாரூர் வணங்கி 574] | | |
| 158 | திருக்காறுயில் | 574 | – நீரானே நீள்சடை |
| 1.9 | தேவூர் | 574 | – பண்ணிலாவிய |
| | ஷை | 574 | – காடுபயில் |
| 160 | திருநெல்லிக்கா | 574 | – அறத்தா லுயிர் |
| 161 | கைச்சினம் | 574 | – தையலோர் கூறு |
| 162 | தெங்கூர் | 574 | – புரைசெய்வல்வினை |
| 163 | கொள்ளிக்காடு | 574 | – நிணம்படு |
| 164 | கோட்டூர் | 574 | – நீலமார் தரு |
| 165 | திருவெண்டுறை | 575 | – ஆதியன் ஆதிரையன் |
| | [தானம் பற்பலவும் சென்று பணிந்தேத்திப்பாடி 575] | | |
| | (திருச்சிற்றேமம்) | 575 | —(நிறைவெண் டிங்கள்) |
| 166 | தண்டலை | 575 | —விரும்பும் திங்களும் |
| 167 | திருக்களர் | 575 | – நீருளார் |
| | [பதி பிறவும் சென்று போற்றி 575] | | |
| 168 | திருமறைக்காடு | | |
| | (திருமுன்) பதிகங்கள் விளம்பி | 575 | – சிலைதனை நடுவிடை |
| | | | – பொங்குவெண் மணற் |
| | | | – கற்பொலிசுர |
| | (திருக்கதவம் அடைக்க) | 587 | – "சதுரம் மறை" |
| 169 | திருவாய்மூர் (ஊர் எல்லையில் ஆடல் காட்சி கண்டு) | 596 | – "தளிரிள வளரென" |

(திருமுன்) பதிகந்தன்னுல்
பரவி 597 — ... ... ...

170 திருமறைக்காடு

கழலிணை பணிந்து ...
பதிகம் பாடி 598 — ... ... ...
திருக்கோபுரத்துள்
இருந்து 615-6 —"வேயுறு தோளி"
திருமுன் மீண்டும்புக்கு...பாடி 618 - ... ... ...

171 அகத்தியான்பள்ளி

பிரான் கழல் வணங்கி 622—வாடிய வெண்டலை
[கோடிக் குழகர் தலைமத் தொழுது 622]

172 கடிக்குளம் 623—பொடிகொள்மேனி

173 இடும்பாவனம் 623—மனமார்தரு

[பதிபிறவும்...வணங்கி...பாடி 623]

174 திருஉசாததானம்

தேவர்பிரான் கழல் பணிந்து 624—நீரிடைத்து யின்றவன்
[புனல் நாட்டுத் தென்மேல் பால் திசை நோக்கி...
வழிச் சென்றுர் 625]
[சம்பந்தரின் பாண்டிநாட்டு யாத்திரை 628 முதல் 895 வரை]

175 கொடுங்குன்றம்

(திருமுன்) வணங்கி 630—வானிற்பொலி
[கி. பி: 649-ல் சம்பந்தர் மதுரைக்கு வருதல்]

176 திருவாலவாய்

ஊர் எல்லையில் 663 – "மங்கையர்க்கரசி"
(திருமுன்) 667 – "நீலமாமிடற்று"
சொன்மலர் மாலை பேர்த்தும்
பாடி 668 ... ... ...
[ஆலவாய்க் கோயிலில் சம்பந்தர் மூர்த்தியார் கழல் பரவினுர் 668]
(மடத்தில் சமணர்
எரிமூட்டியபோது) 704 – "செய்யனே திரு"
சமணரோடு வாது செய்ய உத்தரவுகேட்டு
முன்பாடி 739—"காட்டு மாவுரி"
பின்னும் பாடி 759 – "வேத வேள்வி"

(பதியாது என்று பாண்டியன்
கேட்டபோது) 764—பிரமனூர்
(மங்கையர்க்கரசியார்
அஞ்சியபோது) 760—"மானினேர் விழி"
(வெப்புநோய்தீர்க்கப் பாண்டியனுக்குத்
திருநீறு பூசும்போது) 764 - மந்திரமாவது
(அனல் வாதத்தின் போது
திருநள்ளாற்றை நினைத்து) 784—"தளிரிள வளரொளி".
(புனல் வாதத்தின்போது) 818—வாழ்க அந்தணர்
(ஏடு தங்கவேண்டி) 849-50—"வன்னி"யும்
(ஆலவாய் இறைவனைப்
பணிந்து) 865—"வீடலாலவா"யிலாய்
(திருமடத்தில் இருந்தவாறு)870 - ஆலநீழல்
( ஷ புகலியை நினைந்து)881—"மண்ணினல்ல"வண்ணம்

177 திருப்பரங்குன்றம்
(திருமுன்) வணங்கி 885—நீடலர் சோதி

178 திருஆப்பனூர் 885—முற்றுஞ்சடை
[பதிபிறவும் சேர்ந்து ... திருப்பதிகங்கள்... பாடி 885]

179 திருப்புத்தூர்
(திருமுன்) இறைஞ்சி 885 - வெங்கள் விம்மு வெறி

180 திருப்பூவணம்
இறைஞ்சிப்புகழ்ந்து பாடி 886 - அறையார் புனலும்
" 886 - மாதமர் மேனியன்

181 கானப்பேர்
தொழுது தமிழ்பாடி 886 - பிடிஎலாம்

182 திருச்சுழியல் போற்றி 886— ... ... ...

183 திருக்குற்றாலம்
கும்பிட்டேத்தி 886 - வம்பார்குன்றம்

184 குறும்பலா
கும்பிட்டேத்தி 886—திருந்தமதிசூடி

185 திருநெல்வேலி
பணிந்து போற்றி 887 - மருந்தவை
[திருப்பதிகள் பிறவும் சென்று ... பாடி 887]

186 இராமேச்சரம்
திருமுன்பு...பணிந்துநின்று 888 – அலைவளர்
டி 888 – திரிதருமாமணி
187 திருக்கோணமலை
(இராமேச்சரத்தில் இருந்தபடி)890–நிரைகழல்
188 திருக்கேதீச்சரம்
(இராமேச்சரத்தில் இருந்தபடி) 890 – விருதுகுன்ற
[பலபதியும் தொழுது போற்றி 891]
189 திருவாடானை
செந்தமிழ் மாலைகள் சாத்தி 891 – மாதோர் கூறுகந்து
190 திருப்புனவாயில்
போற்றி செய்து வணங்கினர் 891 – மின்னியல் செஞ்சடைவெண்
[மணமேற்குடியில் வந்தார் 892]
[பொன்னி வளந்தருநாடு புகுந்து896 – ]
191 திருக்களர் போற்றி-896 ... ... ...
192 பாதாளீச்சரம் 896—மின்னியல்செஞ்சடைமேல்
[பதிபிறவும் பணிந்து போற்றி]
[முள்ளிவாய்க்கரை அணைந்தார் 896 – ]
(திருவிடைவாய்) 896 – (மறியார் கரத்து)
193 திருக்கொள்ளம்பூதூர்
கோலின்றி ஓடம் செல்ல 898 – "கொட்ட"மே கமழும்
திருமுன்பு . போற்றி செய்தார் 900— ... ... ...
(முன்னம் அணைந்த பதிகளும் இறைஞ்சி 901]
194 திருநள்ளாறு
(திருமுன்) இறைஞ்சி 902 – "பாடக மெல்லடி"
(ஊரில் வைகி) 903 – (ஏடுமலி)
195 திருத்தெளிச்சேரி
சிவபெருமான் தனைப்பரவி 904—பூவலர்ந்தன
[போதி மங்கையில் பௌத்தர்களோடு சம்பந்தர் வாதிட்டது911-925
196 திருக்கடவூர்
கழல்கள் பணிந்தேத்தி 927 ... ... ...
[காவிரியின் தென்கரை போய்க் கண்ணுதலார் மகிழ்ந்த இடம்
மேவி இனிதமர்ந்து இறைஞ்சி 930]

[கி. பி. 651ல் திருப்பூந்துருத்தியில் சம்பந்தரும் அப்பரும் சந்தித்தல் 935

197 திருப்பூந்துருத்தி

(திருமுன் பணிந்து போற்றி 940— ... ... ...

198 திருநெய்த்தானம்

தமிழ்மாலைகளும் சாத்தி 949 ...

199 திருவையாறு

தமிழ் மாலைகளும் சாத்தி 945—கலையார்மதி
—பணிந்தவர்
—திருத்திகழ்

[திருப்பழனம் இறைஞ்சி 950]

[பதிபிறவும் தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் 950]

200 திருத்தோணிபுரம்

திருமுன் பணிந்தேத்தி 954—"உற்றுமை சேர்வது"

(சீர்காழியில்) அமர்ந்தருளு நாள் திருப்பதிகங்கள் பலபாடினார் 958— ... ... ...

[தொண்டைநாட்டு யாத்திரை 960]

201 தில்லை

திருநடம் பணிந்தேத்தி 962— ... ... ...

202 திருத்தினைநகர்பாடி 662— ... ... ...

203 திருமணிக்குழி 962—பொன்னியல்

204 திருப்பாதிரிப்புலியூர்

(திருமுன்) பணிந்து 963—முன்னம் நின்ற

205 வடுகூர் 963—சுடுகூரெரி

206 வக்கரை 964—கறையணி மாமிடற்

207 இரும்பைமாகாளம் 964—மண்டுகங்கை

208 திருவதிகை

(கோயிலின் முன்திருநடக் காட்சிகண்டு) 965—"குண்டைக் குறள்"

209 திருவாமத்தூர்

அடிபோற்றி 957—"குன்ற வார்சிலை"

(பின்னர் பாடியது) 967—(துன்னம் பெய்)

210 திருக்கோவலூர்

குறைகழல் பணிந்து 968—படைகொள்கூற்றம்

211 அறையணிநல்லூர்
(திருமுன்) ஏத்தி 968 -பீடிறைப் பெரி
அறையணிநல்லூரில் மலை
வலம் செய்யும்போது திரு
வண்ணமலைத்தோற்றங்கண்டு 970 -"உண்ணமுலை"

212 திருவண்ணமலை
(ஊரில் அமருநாளில் ஒருநாள்
திருமுன் போற்றிசைத்து) 972 —"பூவார் மலர்"
[பதிபலவும் பணிந்து 973]

213 திருவோத்தூர்
(திருமுன் சொன்மாலைகளால்
துதி செய்து) 977 — ... ... ...
(மற்றொரு நாள் திருமுன்
வணங்கி ஆண்பனை பெண்பனை
ஆதற்காக) 980 —பூத்தேர்ந் தாயன
[பதிகள் பல போற்றி 984]

214 திருமாகறல் 984 —விங்குவிளை

215 குரங்கணில்முட்டம்
(திருமுன்) பணிந்தேத்தி 985 —விழுநீர் மழுவாள்

216 கச்சி ஏகம்பம்
(திருமுன் பணிந்தேத்தி 995 —"மறையானை"
[காமக்கோட்டம் அணைந்து இறைஞ்சினர் 998]
(ஏகம்பரை ஒருபோதும்
தப்பாதே பணிகின்றபோது)
இயமகம் 999 —பாயுமால்விடை
ஷெ இருக்குக்குறள் 999 —கருவார்கச்சி
மற்றும் திருப்பதிகத்தொடை 999 .—வெந்த வெண்பொடி

217 கச்சிநெறிக் காரைக்காடு
(திருமுன்) 1000 —வாரணவு

218 கச்சி அனேகதங்காவதம் பரவி 1000] ... ... ...
[மாடு திருத்தானங்கள் பணிந்தேத்தி 1000]

219 கச்சித்திருமேற்றளி ஏத்தி 1001 — ... ... ...
[பாலித் திருநதியின் தென்கரை போய் 1002]

220 திருமாற்பேறு

மொழிமாலை சாத்தினர் 1002 —ஊறியார் தரு

,, 1002 —குருந்தவன்

221 திருவல்லம்

(திருமுன்) வணங்கி 1003 —எரித்தவன் முப்புரம்

[பிறபதியில் வணங்கி ... பால் யாற்றின் வடபால் ... பதி பணிவார் 1004]

222 இலம்பையங் கோட்டூர்

(திருமுன்) பதிகம் பாடினர் 1004 —மலையினர்

223 திருவிற்கோலம்

(திருமுன்) பதிகத்
தொடைமாலை பாடி 1005 —உருவினர்

224 திருவூறல்

(திருமுன்) 1006 —மாறில் அவுணர்

[பதி பிறவும் இறைஞ்சி 1007]

(கள்ளில்) 1007 —(முள்ளின் மேல்)

225 திருவாலங்காடு

(ஊரின் புறத்தே துயிலும்
போது களவுகண்டு எழுந்து
இடையாமத்தில் பாடியது) 1010 —"துஞ்சவரு வாரும்"

226 திருப்பாசூர்

(திருமுன்) தாழ்ந்து எழுந்து 1012 —"சிந்தை இடையார்"

[வெண்பாக்கம் முதலாயுள்ள பிறபதிகள் பணிந்து 1013]

227 காரிகரை

(திருமுன் போற்றிசைத்து 1014 — ... ... ...

228 திருக்காளத்தி

(மலையைக்கண்டபோது) 1020 "வானவர்கள் தானவர்"கள்

[பொன்முகலிக்கரை அணைந்து 1021]

[திருமுன்பு எய்தி ... வேடர்பெருமானைக் கண்டு வீழ்ந்தார் 1022]

(திருமுன்) திருப்பதிகம்பாடி 1024 — ... ...
காலங்கள் தோறும் பாமலர்
கொண்டு அடிபோற்றி 1025 — ... ...

229 காளத்தியில் இருந்தபடி

வடகயிலை 1026 —பொடிகொளுருவர்

ஷை 1026 —வானவரிகோளபுலி

| | | |
|---|---|---|
| 230 ஷி. திருக்கேதாரம் | 1026 | —தொண்டரஞ்சு |
| 231 ஷி. திருக்கோகரணம் | 1027 | —என்றுமரியான் |
| 232 ஷி. திருப்பருப்பதம் | 1027 | -சுடுமணி உமிழ் |
| 233 ஷிஇந்திரநீலப்பருப்பதம் | 1027 | —குலவு பாரிடம் |
| [ஷி இறைவர்தானம் பிறவும்பாடி | 1027 | - |
| (அனேகதங்காவதம்) | 1027 | —(நீடல் மேவு) |
| 234 திருக்காளத்தி போற்றி | 1028 | — ... ... |
| (காளத்திலிருந்து திரும்பும் போது) | 1028 | —சந்தமார் |
| [பதிகள் பலவும் போற்றி 1029] | | |
| 235 திருவேற்காடு | | |
| (திருமுன்) பணிந்து | 1030 | —ஒள்ளி துள்ள |
| 236 வலிதாயம் | | |
| வணங்கிப் போற்றி | 1031 | —பத்தரொடு |
| 237 திருவொற்றியூர் | | |
| அடியார்கள் வரவேற்ற போது | 1031 | —"விடையவன்" |
| (திருமுன்) திருப்பதிகம்பாடி | 1032 | — ... ... |
| 238 மயிலாப்பூர் | | |
| திருமுன்பு ... போற்றினர் | 1077-8 | — ... ... |
| (மேற்குக் கோபுர வாயிலுக்கு வெளியே எலும்பைப் பெண்ணாக்க) | 1018 | —"மட்டிட்ட புன்னை" |
| (மீண்டும் திருமுன் சென்று) செந்தமிழ் பாடி | 1018 | — ... ... |
| [பிற பதிகள் வணங்கி 1120] | | |
| 239 திருவான்மியூர் | | |
| திருமுன் நின்று - வினவுரை | 1123 | —கரையுலாங்கடலில் |
| (ஊரில் தங்கி பதிகங்கள் பல போற்றி | 1125 | —விரையார் கொன்றை |
| ,, | ... | ... ... |
| [பதிபலவும் வலந்திறைஞ்சி 1125] | | |

240 திருஇண்டச்சுரம்

திருமுன்பு...வணங்கிஎழுந்து 1126-8 —வரிவளரவிரொளி

241 திருக்கழுக்குன்றம்

(திருமுன்) பணிந்தெழுந்து 1131 —தோடுடையானொரு

242 அச்சிறுபாக்கம்

ஆதிமுதல்வரை வணங்கி 1133 —பொன்திரண்டன்ன

[பதி பிறவும் .. இறைஞ்சி 1134]

243 அரசிலி

அங்கணரைப் பணிந்து 1135 —பாடல்வண்டறை

244 புறவார்பனங்காட்டூர் 1135 —விண்ணமர்ந்தன

[பதி பல வணங்கி 1135]

(சோபுரம்) 1135 —(வெங்கண் ஆனை)

245 தில்லை

போதுதொறும்...தமிழ்பாடி 1141 ... ... ...

[பிறபதியும் புக்கு இறைஞ்சி 1145]

246 சீர்காழி

(ஊரின் தோற்றம் கண்டு) 1147 —"வண்டார் குழலரிவை"

(ஊரின் எல்லையில்) 1148 —நம்பொருள்

திருமுன் பதிகங்கள் பலபாடி 1151 ... ... ...

[முருகர், நீலநக்கர் முதலான தொண்டர்கள் வருகை 1153]

தோணியில் வீற்றிருந்தாரை...

திருப்பதிகம் பல பாடி 1154 —கறையணி

—காமுனம் மலரால்
—இறையவன் ஈசன்
—நிலவும் புனலும்
—பூதத்தின் படையினீர்
—விதியாய் விளைவாய்
—உகலியாழ் கடல்
—உருவார்ந்த
—விடையதேறி
—கண்ணுதலானும்
—காலைநன்மாமலர்

1154 —வண்டரங்க
—கரும்பமர்
—மின்னன
—பல்லடைந்த
—வாருறுவன
—எய்யாவென்றி
—பங்கமேறு
—அடலேறமரும்
—நல்லார் தீமேவும்
—உரவார்கலை
—நல்லானை
—பண்ணின்நேர்
—நலங்கொள்
—விண்ணியங்கு
—பொங்குவெண்புரி
—பொடியிலங்கு
—சந்தமார்
—திருந்துமா
—அயிலுறு படையினர்
—சேவுயருந்
—(ஆரூர் தில்லை)
—(கல்லால் நீழல்)

குறிப்பு : மேற்கண்ட 33 பதிகங்களில் சிற்சில பதிகங்கள் இச்சந்தர்ப்பத்துக்கு முன்னரே பாடப்பெற்றிருக்கக்கூடும். அவைகளில் இன்னவை இன்ன சந்தர்ப்பத்தில் பாடப்பெற்றவை என அறிந்து கொள்ள இயலவில்லை.)

247 நல்லூர்ப் பெருமணம்

நாதரைப் பணிந்து ...
பதிகம் பாடி. 1208 — ... ...
(திருமணம் நடந்தபின்
கோயிலை அடைந்து) 1245 —"கல்லூர்ப் பெருமணம்"
(சோதி எழுந்து உட்புகும்
வாயிலைக் காட்டியபோது) 1248 —காதலாகிக்கசிந்து

[கி. பி. 653-ல் வைகாசிமூலத்தில் திருஞானசம்பந்தர் சோதியுட்புக்கு ஒன்றி உடனுறைந்தார் 1253]

# திருநாவுக்கரசர் தேவாரம்

## "பாடியவாறு அட்டவணை"

| தொடர் எண் | திருத்தலமும் பாடிய இடமும் | பெரியபுராணச் செய்யுள் எண் | பதிக முதற்குறிப்பு |
|---|---|---|---|
| [கி. பி. 574ல் நாவுக்கரசர் அவதாரம் 18] | | | |
| [கி. பி. 599ல் சமண சமயம் சார்ந்தது 37] | | | |
| [கி. பி. 619ல் சமணத்தினின்று மீண்டு சைவரானது 67] | | | |
| 1 | திருவதிகை வீரட்டம் | | |
| | (சூலைநோய் தீரும் பொருட்டுத்) திருமுன் ... நின்று | 70 | —"கூற்றாயினவாறு" |
| [நாவுக்கரசு என்னும் நாமத்தை இறைவன் வழங்கியது 74] | | | |
| | (அரசன் அழைப்பதாகச் சொன்ன அமைச்சரை நோக்கி) | 93 | —"நாமார்க்கும்" |
| | (பல்லவன் நகரில் சமணர்கள் இட்ட நீற்றறையிலிருந்து வெளிவந்த போது) | 98 | —(மாசில் வீணையும்) |
| | (யானையை ஏவியபோது) | 115 | —"சுண்ணவெண் சந்தன" |
| | (கல்லோடு கட்டிக் கடலில் இட்டபோது) | 126 | —"சொற்றுணை வேதியன்" |
| | (கடலினின்று கரை ஏறியதும் அங்குவந்த அடியார்களை நோக்கி) | 132 | —(ஏயிலானை) |
| 2 | திருப்பாதிரிப்புலியூர் | | |
| | சடையாரைக்கும்பிட்டு | 133-4 | —"ஈன்றாளுமாய்" |
| | இனையன ... மாலைகள் பாடி | 135 | — ... ... |
| 3 | திருமாணிகுழி | | |
| | சொன்மலர் கொண்டிறைஞ்சி | 136 | — ... ... |
| 4 | திருத்தினை நகர் | | |
| | சொன்மலர் கொண்டிறைஞ்சி | 136 | — ... ... |
| 5 | திருவதிகை வீரட்டம் | | |
| | பிரானை இறைஞ்சி | 143 | —வெறிவிரவு |

(ஊரில் தங்கிப் பணிசெய்யும்
நாவில் தமிழ்ப் பாட்டுப்
பல பாடி) 144 —முளைக்கதிர்

,, —இரும்பு கொப்

,, —வெண்ணிலா

,, —நம்பனே

,, —மடக்கினார்

,, —முன்பெலாம்

,, —மாசில் ஒள்

,, —கோணல்

,, —எட்டுநாண்

,, —சந்திரனை

,, — எல்லாம் சிவ

,, —அரவணையான்

,, —செல்வப்

[பல்லவன் திருவதிகையில் குணபர விச்சரம் எடுத்தது 146]

[கி. பி. 644-ல் பதிபலவும் சென்றிறைஞ்சத் தொடங்குதல் 147]

(மூண்டீச்சரம்) 147 —(ஆர்த்தான்)

6 திருவெண்ணெய்நல்லூர்

தமிழ் பாடி 148 ... ... ...

7 திருவாமாத்தூர்

தமிழ் பாடி 148 —மாமாத்தாதிய

,, — வண்ணங்கள்

8 திருக்கோவலூர்

தமிழ் பாடி 148 —செத்தையேன்

[பதிபிறவும் வணங்கி ... தமிழ் பாடி 148]

9 பெண்ணாகடம்

திருமுன் நின்று 150-1 —"பொன்னார் திருவடிக்"

10 நெல்வாயில் அரத்துறை

வண்டமிழ் புனைந்து 154-5 —கடவுளை

11 திருமுதுகுன்றம்

வண்டமிழ் புனைந்து 154-5 —கருமணியை

[மருங்குள்ள ... தானங்கள் கும்பிட்டு 155]

[குணதிசைமேல் ... நிவாக்கரை யே போது வார் 155]

12 புலியூர் (தில்லை)

திருநடம் எதிர் கும்பிடும்போது
விருத்தம் *168—கருநட்டகண்டனை*
திரு நேரிசை *168-9—"பத்தனாய்ப்பாட"*
*(கோயிலில் உழவாரப் பணி*
*செய்யும்போது)* *171—"அன்னம் பாலிக்கும்"*

13 திருவேட்களம்

*திருமுன் வணங்கி* *172—நன்றுநாடொறும்*

14 திருக்கழிப்பாலை

கழல் தாழ்ந்து *173—"வனபவள வாய்"*
வண்டமிழ்பாடி *173—நங்கையை*
,, —நெய்தற்குருகு
,, – வண்ணமும்வடிவும்
,, —ஊனுடுத்தி

15 புலியூர்

*(திருக்கழிப்பாலையிலிருந்து*
*தில்லைக்கு வரும் வழியில்)* *174—பனைக்கைமும்மத*
*(அம்பலம் நோக்கி வரும்போது)* *175—"அரியானை"*
(அம்பலத்து மேவி...பணிந்து
பின்னும் போற்றல்) *175-6— "செஞ்சடைக்கற்றை"*
(ஊரில் தங்கி உழவாரப்பணி
செய்யும் நாட்களில்) *176—(பாளையுடைக்)*
*—(மங்குல் மதி தவழும்)*

16 திருநாரையூர்

பணிந்து பாடி *179—விறுதானுடை*
,, *—சொல்லானை*
(ஓமாம் புலியூர்) *179—(ஆராரும்)*
(கடம்பூர்) *179– (தளரும் கோளர)*
*(ஒருவராய்)*

17 தோணிபுரம்

[கி. பி. 644ல் நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சீர்காழியில் சந்தித்தல் 182]
பிரான் முன்நின்று *187—"பார் கொண்டுமூடி"*
ஊரில் வைகும் நாளில் *187—(படையார் மழு)*
*(மாதியன்று)*

[நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சேர்ந்து திருக்கோலக்காவை இறைஞ்சியபின் அவ்விருவரும் பிரிதல் 187]

[கருப்பறியலூர் தொழுது 189]

| | | |
|---|---|---|
| | குரக்குக்கா | 189—(மரக்கொக்காம்) |
| 18 | திருப்புன்கூரும் நீடூரும் | 189—பிறவாதே தோன்றிய |
| 19 | குறுக்கை வீரட்டம் | 189—ஆதியிற் பிரமனர் |
| | | —நெடியமால் |
| 20 | திருநின்றியூர் | 189—கொடுங்கண் |
| | (புள்ளிருக்குவேளூர்) | 189—(வெள்ளெருக்கு) |
| | ,, | —(ஆண்டானை) |
| | (திருவெண்காடு) | 189—(பண்காட்டி) |
| | ,, | —(தூண்டுசுடர்) |
| | (சாய்க்காடு) | 189—(தோடுலாமலர்) |
| | ,, | —(வானத்திள) |
| | (வலம்புரம்) | 189--(தொண்டிரை] |
| | ,, | --(மண்ணளந்த) |
| 21 | திருநனிபள்ளி | 189—(முற்றுணை) |
| 22 | செம்பொன்பள்ளி | |
| | பாடி | 190—ஊனினுள் |
| | ,, | —கானரூத |
| 23 | மயிலாடுதுறை | 190—கொள்ளும் காதன்மை |
| | (அன்னியூர்) | 190—(பாறலைத்த) |
| 24 | துருத்தி | 190 - பொருந்திய |
| 25 | திருவேள்விக்குடி | |
| | தமிழ்மாலைபாடி | 190— ... ... ... |
| 26 | எதிர்கொள்பாடி | |
| | தமிழ்மாலைபாடி | 190 - ... ... ... |
| | [பதிபலவும் பணிந்துபோற்றி | 190] |
| | (திருமணஞ்சேரி) | 190 - (பட்டநெற்றி) |
| 27 | திருக்கோடிகா | 190 - நெற்றிமேல் |
| | ,, | - சங்குலா |
| | ,, | - கண்டலஞ்சேர் |

| | | |
|---|---|---|
| **28 திருவாவடுதுறை** | | |
| (அடைந்துய்ந்தேன் என்ற தாண்டகம் | | |
| திருமுன் அருளி) | *191* | – நம்பனை நால்வேதம் |
| திருக்குறுந்தொகை | *191* | – நிறைக்கவாலியன் |
| நேரிசை | *191* | – மஞ்சனே |
| சந்தவிருத்தம் | *191* | ... ... ... |
| (பல சாத்தி) | *191* | —(திருவேளன்செல்வமே) |
| **29 திருவிடைமருதூர்** | | |
| பாமாலை பல ... சாத்தி | *192* | —காடுடைச் |
| ,, | | —பாசமொன்றிலர் |
| ,, | | —பறையின் |
| ,, | | —குலப்படை |
| ,, | | —ஆறுசடை |
| **30 திருநாகேச்சரம்** | | |
| தமிழ்மாலை புனைந்து | *192* | —கச்சை சேர் |
| ,, | | —நல்லர் நல்லதோர் |
| ,, | | —தாயவனை |
| **31 திருச்சத்திமுற்றம்** | | |
| பெருமானை இறைஞ்சி | *193–4* | —“கோவாய் முடுகி” |
| **32 நல்லூர்** | | |
| (திருவடி சூட்டப்பெற்றபோது) | *196* | —நினைந்துருகும் |
| ஊரில் தங்கி உழவாரப்பணி செய்து | | |
| தமிழ்மாலை பலபாடி | *197* | —அட்டுமின் |
| ,, | | — ... ... ... |
| **33 திருக்கருகாவூர்** | *198* | —குருகாம் வயிரமாம் |
| **34 ஆவூர்** | *198* | — ... ... ... |
| **35 திருப்பாலைத்துறை** | *198* | —நீலமாமணி |
| [பிறவும் சென்றிறைஞ்சி | *198* | ] |
| (அவளிவணல்லூர்) | *198* | —(தோற்றினன்) |
| (வெண்ணி) | *198* | —(முத்தினை) |
| ,, | | — (தொண்டிலங்கு) |
| (பூவனூர்) | *198* | —(பூவனூர்ப்புனிதன்) |
| [நல்லூரில் தங்குதல் | *198*] | |

[திருப்பழனம் வணங்கி 199]
[சூழ்ந்த திருப்பதி ... பணிந்து 200]

| | | |
|---|---|---|
| 36 திங்களூர், | | |
| (அப்பூதியடிகள் மகனை உயர்ப்பிக்க வேண்டிக் கோயில் முன் பாடியது) | 208 | —"ஒன்று கொலாம்" |
| 37 திருப்பழனம் | | |
| (திருமுன்) வணங்கி | 211 | —"சொன்மாலை" |
| 38 திருச்சோற்றுத்துறை | | |
| பலபாடி | 212 | —பொய்விரா |
| ,, | | —காலை எழுந்து |
| ,, | | —கொல்லை |
| ,, | | —முத்தவனை |
| [திருச்சோற்றுத்துறை முதலா ... தானங்கள் பல பாடி 212] | | |
| (திருவேதிகுடி) | 212 | —(கையது) |
| (கண்டியூர்) | 212 | —(வானவர் தானவர்) |
| [மீண்டும் திருப்பழனம் வந்து தொண்டு செய்திருத்தல் 212] | | |
| 39 திருப்பழனம் | | |
| சாலநாள் அங்கு அமர்ந்து இருந்தபோது | 212 | —(ஆடினர்) |
| ,, | | —(மேவித்து) |
| ,, | | —(அருவனை) |
| ,, | | —(அலையார்கடல்) |
| 40 நல்லூர் | | |
| போற்றிசைத்து | 214 | — ... ... ... |
| 41 பழையாறை | | |
| பாடி | 215 | — ... ... ... |
| [பழையாறை முதல் இடம்பல பணிந்து வண்டமிழ் பாடி 215] | | |
| 42 திருவலஞ்சுழி | | |
| தொழுதேத்தி | 215 | —அலையார் |
| [ஊரைவிட்டுச் செல்லும்போது] | | — [ஓதமார்கடல்] |
| 43 குடமூக்கு | | |
| இறைஞ்சி | 215 | —பூவணத்தவன் |
| [குடந்தைக்கீழ்க் கோட்டம்] | 215 | —[சொன்மலிந்த) |